உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவநாம வணக்கம்.
# சிவதயை வணக்கம்.

---

இவை

ஸ்ரீ வன்றொண்டரவர்கள் மாணாக்கர்,

காரைக்குடி, ராம. சோ.

சொக்கலிங்கச்செட்டியாரவர்களால்

செய்யப்பெற்று.

---

திருவிடைமருதூர்த் தேவாரபாடசாலைத்தாபகரும்

சித்தாந்தச் செல்வருமாகிய,

நாட்டரசன் கோட்டை

கண. க. லெ.

இலக்குமணச்செட்டியாரவர்களால்

சிதம்பரம்

"... த்தாயார் அச்சுயந்திரசாலையில்"

... க்கப்பெற்றன.

87

# முகவுரை.

"சிவனெனுநாமந்தனக்கேயுரிய" அநாதிமலமுத்த பரமபதியாகிய சிவனொருவனே, அரிபிரமாதி தேவர்முதலிய சீவர்யாவரையும் தன்னடிமைகளாகவைத்து ஆளுகின்ற முழுமுதல்வனென்பது, "ஈசானஸ்ஸர்வவித்யாநாம்ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்,சிவஏகோத்யேய:சிவங்கர:என்பனவாதிய" க வேதவேதாந்தங்கள் விதந்தெடுத்தோதுவனவும், எந்தவாதிகளாலும்மறுக்கப்படாதனவுமாகிய உண்மைப்பிரமாண மந்திரவாக்கியங்கள் பலவற்றாலும் சர்வசம்மதமாக நிச்சயிக்கப்பெற்ற உண்மையேயாம். இப்பரமபதியாகிய சிவபெருமான் சர்வான்மாக்களும் மேற்கொண்டுய்யும்படி வெளியிட்டருளிய வேதசிவாகமங்களால் விளக்கப்பெற்ற வைதிகசைவ வழிநின்றொழுகும் மாண்புடையார் யாவர்க்கும் இன்றியமையாச்சிவசாதனங்களெவற்றுள்ளும் முதன்மையாகச் சிறந்தது சிவநாமமேயாம். இதனைவிதிப்படி கணித்து நின்றுய்தலைச்செய்தருளும்படி வேண்டிக்கொள்ளப்படுவது திருவருளாகிய சிவதயையேயாம். அவ்வாறுய்தலை விரும்பும்நம்மவர்கள் இச்சிவநாமசிவதயைகளைவணங்கி வேண்டிக்கொள்ளுதல் முக்கியகடமையேயாம். இவ்வுண்மை நோக்கியேபோலும் பெரியாரொருவர், சிவநாமவணக்கமாக ஆக்யாசஷ்டியென்றும் சிவதயைவணக்கமாகத்தயாசதகமென்றும் இருநூல்கள் வடமொழியிற்செய்துவைத்தனர். இவர் திருவியலூரில் அய்யரவர்களென்ற பெயரளவிலேயே பிரசித்தராய் விளங்கிய பிராமணோத்தமரே.

இவர், தமது மரபினர்களாகிய சுமார்த்தப்பிராமணரிற் பெரும்பாலார், விஷ்ணு சூரியர்களுடன் சிவபிரானையும் ஒக்கவே வைத்து ஒத்ததலைவராகக்கொண்டு வழிபடுதல்கண்டும் இவ்வழிபாடு, பலபேரையும் நாயகராகப்பற்றி நின்றுவியபிசரிக்கின்ற பெண்கள் செயல்போல்வதேயாதலுமன்றி, "ஒருவனைப்பற்றியோரகத்திரு" என்னும் வேதசிவாகம விசேட நூல்விதியே மேற்கொண்டு ஒருபுருஷனையே முறையாக மணந்து அம்முறைபிறழாது அவ்வொருநாயகனையே பற்றி நின்றொழுகும் குலப்பெண்கள்போல, முழுமுதற்றலைவனாகிய சிவனொருவனையே நாயகனாகப்பற்றிநின்று மற்றெவரையும் பரிவாரநிலையில் வைத்து அம்முறையில் வழிபடுக வென்று வேதசிவாகமாதிகள்கூறும் விதிக்குவிரோதமாய்ச் சிவாபசாரமும் விளைக்குந் தீச்செயலுமாமென்னு முண்மை நோக்கிச் சிவனொருவனையே வேதசிவாகம விதிமுறையில் வழிபாடுசெய்து திருவருள்பெற்று விளங்கினவர்.

பார்வதியம்மையார், "முறைபடு சுருதி யெல்லா மொழியினு மதுவே சார்வாய், உறுகில ராகிப் பொல்லா வொழுக்கமே பூண்டு முக்கண், இறைவனை யிகழ்ந்து முத்தி யெய்திடா துழல முன்னாள், மறையவர் பெற்ற சாப நின்னையு மயக்குற்றதோ. தாதையாய்த் தன்னை நல்கித் தந்தொழிற் குரிய னாகி, ஆதியாய்த் தங்கட் கின்றி யமைவுறுச் சிவனை நீக்கி, எதிலார் பக்க மாகி யில்லொழுக் கிறந்தார் போலும், வேதியர் முறையே செய்தாய் வெறுப்பதென் னின்னை

யானே. என்று கூறியருளியபடி அச்சுமார்த்தப் பிராமணர் முதலியோர் ததீசி, கௌதமர் முதலிய மகரிஷிகள் சாபவசத்தால் சிவபக்தியாதி நீங்கிய சிவத்துரோகிகளென்பதும், அதன் பின்பு அப்பார்வதியம்மையாரே திருவுளமிரங்கி, "ஆயினு மறையோர் தம்மி லருமறை முறையே யெங்கோன், தூயநல் வேடம் பூண்டு தொண்டுசெய் வாரு முண்டால்." என்று கூறியருளியபடி, அச்சாப வசப்படாத உத்தம மறையோர்களிலொருவரே மேற்கூறிய அய்யாவர்களென்பதும் தெளிவாகின்றது.

இத்தகைய உத்தமர் சிவனொருவனையே நோக்கித் திருவருளை வேண்டிநின்று செய்த அவ்வடமொழி நூலிரண்டும் தமிழில் வந்தால் தமிழ்நாட்டிற்குபகாரமாமென்று மெய்யன்பர் சிலர் வற்புறுத்தினமையால் அதனை மறுக்கமாட்டாது, அவ்விரு நூல்களின் தாற்பரியமாத்திரமே அமைய வைத்து மேலும், உண்மை நாயன்மார் மகிமை முதலியனவும் சிவாஷ்டோத்தரசத நாமார்த்தங்களும் தெரிந்தமட்டில் விளக்கிச் சிவநாம வணக்கம், சிவதயை வணக்கம் என்றிரு நூல்களாகச் செய்தேன். அடியேன் அதற்குரிய அறிவாற்றலில்லாதேனாதலால் இந்நூல்களிலுள்ள குற்றங்கள் நீக்கி அடியேனையுந்திருத்திக் குணமேகொண்டருளும்படி, கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து அன்பும் அருளும் வாய்ந்த பெரியார் திருவடிகளைப் பணிந்து பிரார்த்திக்கின்றேன்.

ராம. சொ.

# சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர் மாணாக்கர்

காரைக்குடி, ராம. உ.

## ராமசாமிசெட்டியாரவர்கள்

செய்தது.

---

சிவநாமந் தயையிரண்டின் சீர்விளக்கு முகத்தானந் தெய்வ சைவ, *சிவநாம மவ்வடநூற் சிதைவகற்றி யதன் மேலுஞ் செவ்வி யோங்கச், சிவநாம வணக்கமுமத் தயை வணக்க மும்மினிது தெருட்டித்தந் தான், சிவநாமன் சொக் கலிங்க தேசிக னெங்குருஞானச் செல்வன்றானே.

* சிவநாமம்—மங்களகரமான கீர்த்தி.

உ

சிவமயம்

# சிவநாம வணக்கம்.

## காப்பு.

திருவரு ளதனாற் பிரணவ வதனந்
திகழ்திரு வல்லபா வாமம்
அருணமெய் யிதழி மதிநதி வேணி
யசலமா தாமக னமைதி
வருபிதா மகனின் மைகளத் தின்மேல்
வாரண முலககா ரணமுன்
மருவிவந் தருளுங் கணேசர்சே வடிகள்
வழுத்துபு வணங்கிவாழ் வுறுவாம்.

திருவருளதனால் வந்தருளும் என்றியையும். பிரணவ நிலை விளக்கும் திருவதனமும், வல்லபாசத்தி விளங்குகின்ற தொடையும், அருணமெய்—செந்திருமேனியும், ... வேணியும், அசலமாகிய மாதாமகனையுடைமையும், பிதாமகனின்மையும், கண்டத்தின்மேல் யானைவடிவமும், செகத்காரணநிலையுமாகிய இவை முதலியவைகள் மருவிவந்தருளுங்கணேசரென்க.

# சிவநாம வணக்கம்.

## சிவநாமஸ்துதி.

பரமகல் யாண மவ்வி யாசமாப் பல்கு பான்மைக்
கருணைமா நிதியென் றுன்றோர் கருதுறு சிவனை யின்பே
தருபவ டுதிப்போர் துன்பந் தவிர்ப்பவ னாய வன்றன்
தெருடரு நாமத் தாயைச் சிந்தனை செய்து வாழ்வாம்.

சிவனையும் அன்னுனுடையநாமமாகிய தாயையும் என்க. அவ்வியாசம் முகாந்தரமின்மை. உறவு பகை பிரதிப்பிரயோசனமுத லியவைகள் நோக்காமல் எப்போதும் எவ்விடத்தும் விரிந்து செல் லும்பகுதியதாகிய கருணை என்க.

## நூல்.

வேதசிவா கமங்களெலாம் விதந்தசிவ நாமமெனும்
விமலத் தாயே, மோதசிவ னுமையிருசேய் முதலியர்மாண்
பறிந்தனுகு முறையோர் கில்லேன், மூதகவர் நிலையெங்கே
மூடனே னிழிவெங்கே முன்னலத்தால், ஓதவெளி தாயிலகு
முனையுணர்ந்தே வணங்குமெனை யோம்பு வாயே. (க)

மூ தகு அவர் எனப்பிரிக்க. கடினமின்றியாவரும் எளிதாய் ஓதற்குரிய உன்னையே என்க. சிவஎன்னும்நாமம், பலவகைத்தொனி பேதமுள்ள அக்ஷரங்களினுச்சரிப்புமுறையறியாதவரும் முட்டின்றி உரைத்தற்கெளியதென்பது கருத்து.

# சிவநாம வணக்கம். ௩

தக்கபெருந் தேவரெலாந் தாழ்ந்தேத்துஞ் சிவநாமத் தாயே யிந்த, அக்கிரமக் கலியாம்பே ராறுபாந் தகந்தாதி யாய வெள்ளம், மிக்கெழலாற் சாதிநிலை விளம்பியவாச் சிரம நிலை விமல நூல்சொல், நக்கதிமுற் றாழ்ந்தந்தோ நலிதலினீ யேவிளங்கி நலஞ்செய் வாயே. (௨)

நக்கதி--சிறந்தகதி. ந—சிறப்பு "நத்தெய்வதருக்கான், நக்கீரன் நப்பின்னை என்பனவற்றிற்காண்க. சாதிநிலை ஆச்சிரமநிலை மோக்க நிலை முழுதும், அக்கிரமமேவடிவாகிய கலியுகமென்னும் ஆறுபாம் புதலாலும் ... வெள்ளமிகுந்து பெருகுசலாலும் அந்நிலையிலாழ்ந்து நலிவுறலால் நீயே எங்கும்விளங்கிநின்று நலஞ்செய்தருள்வாயென்க.

அரிபிரமா தியர்போற்ற வவர்தகுதிக் குரியநிலை யருளி யோம்பும், திரசிவநா மத்தாயே சிவவெனுஞ்சொற் பொரு ளாமா தேவன் வாய்மை, தெரிபணுகு மறிவாற்றல் சிறிது மிலே னீயேயென் செந்நாப் பீடத், தொருவறவீற் றிருந் தருள்வா யுனைப்பணிந்தே புகலடைந்தே னுண்மை யீதே(௩

நமசேடி சிவனெனும்வாய் நனிவிளக்கு முருத்திரமா நமகமான, இமைவேத விருதயத்தி னிலங்குயிராஞ் சிவநாம மெனுந்தா யேநின், கமையான் பினர்தேவர் களுமேவல் செயவாழுங் கனதை யாதி, அமையாத சீருடையா ராயிடி னின் னரும்பெருஞ்சீ ரளப்பார் யாரே. (௪)

உ

# சிவநாம வணக்கம்.

நமசேடி, உலகெங்கும் கீழோர் மேலோர்க்குச்செய்யும் நமஸ்காரத்தைத், தாமேவகித்துக்கொள்ளும் ஆற்றலில்லாத அம்மேலோராகிய அரிபிரமாதியர்யாவரும், அந்தநமஸ்காரச்சொத்துக்குத்தானொருவனே உரியனென்னும் சிவனாகிய தன்னிடமே சேர்த்துவிட, அந்நமஸ்காரம் தனக்குமேலொருவரின்மையாற் பிறிடஞ்சேர்க்கப்படாமல் தன்னிடத்திலேயே சேஷித்து நிற்கப்பெற்ற சிவனெனக. இதனை, எல்லாஞ் சிவமயமே என்பது விளங்க, எல்லாப்பொருளையுஞ்சிவனாகவே நமக்கின்ற சிருத்திர நமகமும்வலியுறுத்துகின்ற உண்மை நோக்கியே, "சேர்ந்தறியாக்கையானை" என்றுமணிவாசகசுருதி வழுத்தியது. வாய்—வாய்மை. கமை—நிறைவு.

இனியதிருத் தமிழ்மொழியே யியம்புநர்க்கு மிசைப்
பெளிதா யெழுத்திரண்டாய், மனியசிவ நாமசுப மாதாவே
நினைநாவின் வகித்த மாண்பாற், கனியனிவே தியற்கெவருங்
கடப்பருங்கூற் றுதைத்தமரர் கவலை நீப்பான், பனியரணம்
பாற்றினனப் பரனெனினின் பாவுகலம் பகாற் பாற்றே. (ரு)

வடமொழிப்பயிற்சியின்றித் தமிழ்மாத்திரமே கூறுவோர்க்கும் இசைத்தற்கெளிதாய் இரண்டெழுத்தளவாய்மன்னிய சிவஎன்னும் நாமமாகிய மாதாவே என்க, வேதியன்—மார்க்கண்டமுனிவன். பனிஅரணம்—யாவரும் நடுங்கத்தக்கோட்டை. அது, முப்புரம்.

பலவகைய சமயிகடம் பாலிர்த்து மவர்கருத்துப்
பலியா வண்ணம், நிலவொளிய பார்க்கபூத நின்றொளிர்கா

யத்திரியி னிசார்த்த மாகி, யிலகுசிவன் றிருப்பெயரா மெம
தன்னே வேதாதி யீயு நன்மை, அலகிறவத் துடல்வருந்தி
ருமெளிதி னீயருள்சீ ரறைவார் யாரே, (௬)

பலசமயிகளும், பர்க்கபதப்பொருளைத்தம்பக்கமாகஇழுத்தும்,
பாதந்திரர்களாயியற்கையினின்றி மேனிலையருதவியாற்செயற்கையி
ஞெளிரும் அச்சமயத் தலைவர்கள்பால் அப்பொருள்செல்லாமல்,
இயற்கைஒளியனாய் எவர்க்கும் ஒளிகொடுக்கும் சுதந்திரபதியாகியசிவ
னையே நோக்கிநிற்கும் அப்பர்க்கபதத்தைத்தன்னிடத்திற்கொண்ட
காயத்திரியினுண்மைப்பொருளாகியசிவமென்க. வேதாதிநூல்களா
ற்கூறப்படுநன்மை உடல்வருந்திஞற்றுகும். நீயோ மிக எளிதின
ருள்கின்றாய் என்க.

வேதசிர வணக்குரிய வேதியரா மூவருண மேலோர்க்
கந்தி, யோதுமனு வெனக்காழி யொளிர்மணிசொல் குளிர்
சிவப்பே ருண்மைத் தாயே, காதுபுரத் தசுரரைமாற் கணை
முதற்கொண் டழித்தனன்முக் கண்ண னன்றோர், ஆதியரை
யடக்கிருளே யசாதனியா யுனைநினைப்பார்க் கழித்தி நீயே.(எ)

பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் மூவரும் வேதம்ஓதுதற்கு அதி
காரிகளாதலால் அம்மூவருணத்தாரும் வேதியர்களே. காழிமணி,
"வேதியர்க் கந்தியுண் மந்திரமஞ்செ ழுத்துமே" என்றருளியவேதி
யர் அம்மூவகையருமே என்க. முக்கண்ணன், மாலாகிய கணைமுத
லிய சாதனங்கொண்டு, யாவரையுங் காதுகின்ற பெருவலியாகிய

# சிவநாம வணக்கம்.

புரத்தசுரரை அழித்தனன். உன்னைநினைப்பார்க்கு அவ்வலியர் முதலிய யாவலரயுமடக்கி அநாதியே பந்தித்துள்ள. ஆணவமலஇருளை ஒருசாதனமுமின்றி நீ அழிக்கின்றாய். நின்வலி எவற்றினும்பெரிதே. நீ நினைத்தால் என் கஷ்டமுழுதநீங்குமென்பது கருத்து.

காழிமணி சோதியுளோர் கன்னலிற்பல் கோடியருங்
கலப்ப நல்கும், வாழிசைநா மத்தாய்நீ வருநெறிமான் முத
லர்பத வரிசை யோர்க்கும், ஊழினுறு முத்திமக ளுன்வச
மாய்க் கைதாங்கி யுடன்சார் வாணின், வீழியலென் மனக்
கோயின் மேவுபுசெந் நாத்தவிசின் விளங்கு வாயே. (ரு)

தாயே நீ வருகின்ற திருவீதியில் மால்பிரமாதியர் பதவிகள் அலங்காரவரிசைகளாய் அழகு செய்யும். மோக்ஷலட்சுமி உன்வசத்தளாய் உன்கைதாங்கி உடன்வருவாள் என்க. எனவே நின்கடைக்கண்நோக்கையே மாலாதியர் பதவிகள் எதிர்பார்க்கின்றன. பாமுத்தி உன்வயத்தது. நீ என்நாவிலிருந்தால் அது தானேவந்து கைகூடுமென்பது கருத்து.

அகிலமுய வருளுமர சாழ்கடலி னமிழ்பெருங்க லம்பி
யாகத், தகவமர்பு கரையேறக் கருமகிமைச் சிவநாமத் தாயே
நின்னை, அகமுறநா விற்றரித்தோர்க் கமலசிவ ரூபமெளி
தளிக்கும் வாய்மை, மிகுநலனோர்ந் தனைப்பணிந்தேன் வினை
யேனு வினிலென் றும் மேவு வாயே. (சு)

அம்பி—தெப்பம்.

பைஞ்ஞீலி யணையரசு பரிந்தனையோர் முறைபகரப் பத்தர்க் கெல்லாம், மைந்நீடு களனமுதம் வழங்கிடச்செய் சிவநாம மாதா நின்னை, மெய்ந்நாவிற் கொளுமன்பர் விழி செல்லுந் திசையெல்லாம் விமலை பாகச், செம்மேனிச் சிவனுருவே திகழுமெனி னின்பெருமை செப்ப லாமோ. (கO)

நாவினில்லைத் தினியசுவை நயங்கண்ட வாரூரர் நாவே சொல்லும், ஓவறவென் றுயர்மகிமை யோதுசிவ நாமமே யுமையோர் பாகன், கோவமுறீஇ மதற்றகித்தான் குலவு னைநா விற்றரித்தோர் கோவ மாதி, யாவனவோ ரணுவுமிலா ததிசாந்த ராய்த்திகழ்த லறிந்தா மன்னே. (கக)

"நற்ற வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லு நாந மச்சி வாயவே" இது சுந்தரர் தேவாரம்.

நம்பிமனுப் பன்முறைபொ னம்பிபெறப் புகன்றசிவ நாம மென்னும், அம்மைசசி வதுபவா ராசிவச திப்பெயர்க ளிவை மாலால், முன்பொருவன் மொழியினுமம் மொழித் தொடர்பிற் சிவபதஞ்சார் முறையா லன்னேன், றன்பதது ளிகண்முடிமேற் சதுமுகனு தியர்கொளிற் சீர் சாற்ற லாமே.

நம்பி—சுந்தரர். பொன்பெற நப்பி என்னு மனுவைப் பன்முறை புகன்ற சிவநாமமாகிய அம்மையே, ஒருவன்

அ

# சிவநாம வணக்கம்.

பெண்மயலார்தியால் சசிவது உபவாராசிவசநி என்னும் பெயர்கள் கூறினும் அவற்றில் சிவ என்னும் நாமம் இயைதலால் அதற்கே அவன்பாததுளியைப்பிரமாதியர்சிரமேற்கொளின் நின்சீர்சாற்ற முடியுமோ என்க. சசிவது—சந்திரன்போன்ற (முகம்) உபவாராசிவசநி—சமுத்திரசமீபத்திருக்கின்றான்.

மணிவாசகப்பெருமான் வைதிகவைந்தெழுத்தியற் சீர் வயங்க முன்சொல், அணியாருஞ் சிவநாம வன்னேநெஞ் செழுந்துமிடற் றமைந்து நாவில், நணிவாழ நினைவைத்தோனவின்மிடறு மணிமிடறாய் நயத்த லாதி, துணியாத நலஞ் சாரக் கொடுக்கின்றாய் நின்மகிமை கூற லாமே. (கங)

ஒருவன் அந்நியசமயங்களைக்கடந்து அகந்தாதி துர்க்குணமின்றி வைதிகநெறியில் வழுவாதுநின்றால் அந்நன்மையாற் சைவநெறிசார்ந்து சிவசரியாதி மெய்த்தவம் புரிந்து முறையேவரும் சிவஞானத்தாற் சிவபத்தி முதிர்ந்து பரமுத்திபெறுவனென்றுண்மை விளக்கியுய்விக்க வந்தருளிய மணிவாசகப்பெருமான், முதலில் வைதிகநெறி விளக்குவாராய் "நமச்சிவாய வாழ்க" என்று வைதிகவைந்தெழுத்தினியல்விளங்கப் பாடியருளிய சிவநாம அன்னே என்க. "வேதநெறி சைவநெறி பத்திநெறி வழாது" என்ற பரஞ்சோதி வாக்கும் இம்முறையே விளக்குகின்றது.

# சிவநாம வணக்கம். கூ

வாதவூர் மணிசைவ மணஞ்செய்திரு வைந்தெழுத்து வாய்க்கப் பெற்றேன், மாதவஞ்செய் தேனென்று வழுத்தி மகிழ் சிவநாம மாதா யாவன், காதினிது வதனிலிறு கால புத்தி யாலெனுநிற் கதுவப் பெற்றேன், ஓதவனை யொரு வீட்டி லுறுத்துனக்குக் கைம்மாறுண் டோவன்னே.

வைதிகவைந்தெழுத்தை வாழ்கவென்றம்மட்டிலமைந்த மணிவாசகர், சைவத்திருவைந்தெழுத்தை, "நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்" என்று குருந்தடியில் வாய்க்கப்பெற்ற அதிரகசிய அருமைப்பாடு விளங்க விதந்து பாராட்டிய விசேடத்தாலும் மேற்கூறிய உண்மை தெளிவாம். இறுகால்—தேகாந்த காலத்தில். அபுத்தியாலெனும்—அபுத்திபூர்வமாகவெனினும்.

குருந்தடியி லிருந்தருளுங் குரவனடி சிரசின்மிசைக் கொளுமா ணிக்க, அருந்துணையின் றிருச்செவிபுக் ககத்தில குஞ் சிவநாம வன்னே முன்னே, விரிந்ததவ மேதையர்கள் விடயதாவாங்கியினை வீட்டி நாவில், இருந்தொளிர்நிற் பேணி வள ரின்பவா ரிதிதோய்வாழ் வெய்தி னேரே. (கரு)

விடயதாவாங்கி—ஐம்புலன்களாகிய காட்டுத்தீ.

திருவுலகெலாமென்னுந் திவியமனு மேற்கொண்டு திருத் தொண் டர்சீர், பரவடிக டில்லையிலி பம்மேற்கொள் பவனி

யினிற் பரிவா யோதும், அரியசிவ நாமமெனு மன்னையே நின்னையேந் தஞ்ப ரேயல், வுரியநிலைக் கூறுபுரி யுலகமய லொருங்கோழித்தின் புறுகின் றூரே. இபம்—யானை. (கசு)

சைவவுல குய்வதுறத் தண்ணருளால் வெண்ணெய் நகர் சார்மெய் கண்ட, தெய்வமணி தண்ணிழலாந் திகழ் பதியென் றுரைநாமச் செல்வத் தாயே, நைவனமுற் றொழி த்தின்பு நல்குனையே நவிற்றுதன்முன் னயந்த நாயேன் செய்வனசெய் திடர்முழுதுந் தீர்ந்துய்வா னிறைஞ்சினனத் திறநல் காயே. (கஎ)

மெய்கண்டமணி, "தண்ணிழலாம் பதிவிதி யெண்ணு மஞ் செழுத்தே." என் றுரைத்தருளிய நாமத்தாயே என்க.

கைகண்ட தெய்வமெனல் கண்கண்டே யருணந்தி கழ ல்வீழ்ந் தேத்த, மெய்கண்ட மணியவர்க்கு விழைந்தருளுஞ் சிவநாம விமலத்தாயே, உய்கண்டந் தருளுனைப்போற் றுத ற்கிடர்நீத் தேனையவைக் குறுத்தி நாயேன், மைகண்டன் றிருவடித்தா மரைகண்டின் புறுவாழ்வு வழங்கு வாயே. கஅ

நாயேன் உனைப்போற்றுதற்கு தாயே, உய்கண் தந்து—ஞானக்கண்ணைத்தந்து இடர் நீக்கி, ஏனையவைக்கு—தீவினை களுக்கு. உறுத்தி—அவ்விடருறச்செய்து....வாழ்வு வழங்கு வாயென்க.

மன்னுமரு ணந்திசிவன் மறைஞான சம்பந்த மலமுத் தர்க்கு, நன்னருள் சிவநாம நற்றாய்நின் சுவையமுத நயந் துட் கொண்டோர், துன்னயனு தியர்பதமோர் துருப்பு மல துக்காங்கிச் சூழ லேயாம், என்னவெறுத் தொதுக்கு வரே லிம்பரா சாதிகளை யிசைப்ப தென்னே. (கசு)

மறைஞான சம்பந்தர் வாயமுதாற் றாயபரு வச்சீர் வாய்ந்து, நிறைஞான வுமாபதிக்கு நிகழ்த்துசிவ நாமத்தாய் நின்னன் பர்வான், இறைவேதன் முதற்சுரரை யிரிக்கவு மாங் கவர்பதவிக் கேனை யோரை, அறைசீரி னிறுத்தவும் வல் லவராயு மமைந்திருக்கு மழகி தென்னே. (உ0)

வாயமுது, பட்டகட்டையிற் பகற்குருடுபோகின்றதெ ன்ற மந்திரவாக்காகிய அமுதம். பருவம்—அதிதீவிரதரபக் குவம்.

திருவுடைமூ வாயிரருட் சிறந்தவுமா பதிஞானச் செ ல்வ ராசான், மருவருளாற் பெறுசிவநா மத்தாயே யுவர் மாந்தி மாலிருண்டு, தருபுனல்சூ ழாதியுட றனைவளர்க்கு நினைப்பாவு தக்கோர் வெண்ணீற், றுருவினரா யருட்கட லுண் டொள்ளமுதே பெய்துயிர்முற் றோம்பு வாரே. (உக)

மால்—மேகம் உவர்மாந்தி—உப்புநீருண்டு. உடனே இருளடைந்து தருநீர் பயிர்முதலியவற்றின் உடல்களை மாத்

திரம் வளர்க்கும். உன்னைப்பரவுகின்ற தக்கோர் அருட்கட லுண்டு இருணீங்கி வெண்ணீற்றுருவினராய் அவ்வருள முதமே பொழிந்து உயிரெல்லாம் வளர்க்கின்றார்.

முள்ளிமுத லுயிர்க்குநிறை முத்தியரு ளுமாபதிமா முனிவர் கோமான், உள்ளொளிர்நா மத்தாயே யுன்னிர ண்டு திருவழுத்தி னுறுமாண் போர்ந்தோர், வள்ளிதன்மே லொன்றிலையென் வாய்மைநிலை மரீஇயின்ப வகைமுற் றார்ந்து, விள்ளுநலந் தீதினசை வெறுப்பொழிந்தே யப்பயநிலை மேவி னாரே. (உஉ)

வள்—வண்மையுள்ள. இதனினுமேலானதொன்றில் லையெனும் உண்மைநிலைமருவி யின்பவகைமுழுதுமார்ந்து, ஓர்ந்தோர், நன்மை தீமையால் வரும் சுகதுக்கங்களில் விரு ப்பு வெறுப்பின்றி எக்காலத்தும் எவ்வித அச்சமுமின்றி வாழ்கின்ற மேல்நிலைமேவினா ரென்க.

ஆசினவா நாப்பணடை யாதருளி னுமாபதியா ரருட்ப யன்கண், வாசியிடை நிற்கைவழக் கெனுஞ்சிவநா மத்தாயே வாய்கா துன்னேத், தேசுறக்கொண் டவரிருக்குந் திசையி னும்பேய் பூதாதி தீமை செய்யா, கூசுவர்வே தன்முதலோர் குறுகவெனி னின்மகிமை கூற லாமே. (உ௩)

வாய் காது—வாயிலும் காதிலும். " ஆசினவா நாப்ப

ணடையா தருளினால், வாசியிடை நிற்கை வழக்கு. இது, உமாபதிசிவாசாரியர் திருவருட்பயன்என்னும் சித்தாந்தநூலின்கண் விளக்கியருளிய திருவெண்பா.

திருமூலர் சிவமூலஞ் சிவாயசிவ முதற்பலவாத் திகழ்த்து நாம, ஒருதாயே யுனைநாவி லுளத்திலிடை யுறுதிருத்துமுண்மை யன்பர், பெருமேரு துரும்பாகப் பேசுமது மேருவெனப் பிறங்கு மாறு, தருவாய்மை வலிமுதல சார்வரெனிலவர்தவச்சீர் சாற்ற லாமே. (உச)

திருமூலநாயனார், சிவமூலமந்திரத்தைச்சிவாயசிவ என்பது முதற் பலவகை யாகத்திகழ்த்திய அச்சிவநாமமாகிய தாயே என்க. (சிவாயசிவ) என்பதில் உமாபதியார் திருவருட்பயனில் "வாசியிடைநிற்கை" என்றருளியபடி வாசி இரண்டுக்கும் நடுவில் ஆன்மா நிற்றல் காண்க. "உடையானன்றனடுவிருக்கும் என்றருளிய திருவாசக சுருதித்திருமந்திரப்பொருளும் இத்திருவைந்தெழுத்திலமைதல் காண்க.

அசலனுமை யுடன்விடைமே லணியருள்சீர்ப் பணிபுரியா னைய ரன்பார், இசையிலொளிர் சிவநாம மெனுந்தாயே யெவற்றையுநீத் திதய நாவில், பசையுறவைத் துனைப்பரவும் பண்பினர்க்கு நினைப்பவெலாம் பல்க நல்கி, திசையொளிரின்புருக்காட்டிச்சீதவருளமுதூட்டுஞ்செல்வி நீயே.

# சிவநாம வணக்கம்.

அசலன்—அசைவற்றசிவன். அவனையும் தம்முன்வரச் செய்த ஆனையர்ள்க. பசை—அன்பு. இன்புரு—சிவரூபம்.

ஆவியிலா களமுறநின் றருளுருத்ர பசுபதியா ரன்பு நீடும், நாவிலெழு சிவநாம நற்றுயே நினைப்பரவு நல்லோர்ச் சார்ந்த, தாவருமன் பினர்புருவத் தனிமுரிப்பில் வசப்படும் வான் றருவா னுதி, யாவுமெனி னின்பெருமை யாவரறிந் துள்ளவா றிசைக்கின் றுரே. (உகூ)

ஆவி—வாவி. ஆகளம்—கழுத்துவரை. புருவமுரிப்பில் புருவங்களை மேல்நிமிர்த்துப்பார்த்தலில்.

திருநாளைப் போவார்தந் திருவாக்கி லனவரதந் திகழா நின்று, தருவாய்மைச் சிவநாமத் தாவேநிற் பரவியருள் சார்ந்த சீலர், ஒருவாமுத் தொழில்செய்வலி யுளராயும் விழை யாம லுபசாந்தச்சீர், மருவாநின் றேனையர்கள் மதிப்புமறை நோக்காது வாழ்கின் றுரே. (உஎ)

ஏனையர் நன்மதிப்பு—பிறர்செய்யும் நன்குமதிப்பு-மறை அதன் எதிர்மறையாகிய அவமதிப்பு. நோக்காது இரண்டை யும் பொருட்படுத்தாமல் அதீதநிலையில் வாழ்கின்றுரென்க.

தந்தைதா ளெறிந்துசிவத் துரோகநிலை தவிர்த்தருள் சண் டேசர் பாலாட், டந்தமிலர்ச் சனைநாம வன்னேநின் சுவையமுதுண் டார்வமிக்க, சிந்தையர்வாய் நால்வேத சிவா

கமமா திகடாமே திகழா நிற்கும், வந்தயனு தியர்பணிவர் வரையாநின் விழுத்தகுசீர் வழுத்த லாமே. (உ௪)

வரயில், வேதசிவாகமாதி அருணூல்கள் தாமாகவே விளங்குமென்க.

திருநாவுக் கரசுமனு சிவமூல மனுவென்றே தேற்றப் பூதி, ஒருவாதெல் லாஞ்சிவமென் றோர்நிலைநின் றுரைசிவ ப்பே ருண்மைத் தாயே, பெருவாழ்வெ லாநினையே பேணு நருக் கருளுனைச்சேர் பெற்றி யானின், ஒருநாதன் றயை நிறைமாண் புடையானென் றுலகோது முறைபெற் றானல்.

ஒப்பார் மிக்காரில்லாத ஒருவனாகிய நின்நாதன் உன் னைச்சேர்ந்திருக்கும் பெற்றியாற்றான்....மாண்புடையானெ ன்று உலகெலாம் ஓதும் புகழ்பெற்றானென்க. உரை—புகழ்.

பெருமிழலைக் குறும்பர்சிவா பேதகசுந் தரசிவமே பேணிவாய்மை, தருகயிலை முன்னுறச்செய் தண்சிவநா மத் தாய்நிற் சாற்றி ரண்டு, மருவெழுத்தா லிராம மன்பெயரு மமையினுமுன் மங்க ளாதி, பொருணிறைநின் பேர்நிகரா புராரியுநின் னாற்சிறந்து பொலிகின் றானல். (௩௦)

சிவ அபேதக—சிவனில் வேறாகாத சுந்தரசிவம் என்க. அரிநாமமும் ராமநாமமும் இரண்டெழுத்தாலமையினும் அவை முதலியவைகள், மங்களம் சுத்தம் சுயப்பிரகாச முத

# சிவநாம வணக்கம்.

வியபரத்துவ நிலைய அரும் பொருள்விளக்குகின்ற சிவ என்னும்நினது திருப்பெயரை நிகராவென்க,

அருண்மயநா புரத்தொனியா ரமுதுதினந் தொறுநுகர்பே ரன்பார் சேரர், குரிசிலுளத் தவிர்நாம குலமன்னே யன்பொழிந்து கோது மிக்கு, விரவுலகர் நினக்குவகை விளைத்துய்யா மைகண்டும் வினையே னன்பு, மருவிலனின் னருள்விழைந்தேன் மாசுபொறுத் தருடியென வணங்கி னேனே.

உலகர், அன்பின்மையால் உனக்கு உவகைசெய்துய்யமாட்டாதுலைதல் கண்டுமென்க.

தவசெபமுற் றொண்டுவகை தாம்புரிந்தும் புரிவித்துந் தாவில் காழிச், சிவநகர்வாழ் கணநாதர் சிந்தையொளிர் சிவநாமச் செல்வத் தாயே, உவகையினெனுன் னுத்தவிசி லுனைவைத்தென் போதநினக் கூட்ட வேட்டேன், எவமறவேட் டலும்போத மேகியதூட்டிடவேறின் றென்செய் கேனே.

சிவநெறிநிந் தனைநாவைச் சேதிக்குந் திருப்பணியேசெய்துய்விக்கும், அவருளனி லனவரத மவிர்நாம வன்னைநினை யன்பா லென்றும், நவிலுநருக் கருள்வதிலு நலமோவிப் பலபாவ நவிற்று நாயேற், கிவனினியோர் கதியிலனென் றிரங்கிலுல கெங்கணுஞ்சீ ரிலக்க மாமே. (ருரு)

அவர் உளனில்—அச்சத்திநாயனுருள்ளத்தில்.

அறநெறிநின் றேபுரியவ் வரசியலு மொதுக்கருளே யடிகள் பற்பல், நிறைதலம்புக் கருள்வெண்பா நிகழ்பாவிற் றிகழ்நாம நிமலத் தாயே, சிறிதுமுனைக் குறியாது செப்பு பிறர்சொற்களினின் றிருப்பே ரெந்த, முறைபுறினு மவரிடர் கண் முற்றொழித்தின் பருணின்சீர் மொழிவார் யாரே (௩௪)

அருள் ஐயடிகளென்க. பிறர் உன்னை உள்ளபடி சிறிதும் நோக்காமல் சொல்லுஞ்சொற்களில், அச்சொற்றொடர் முதலிய எம்முறையிலேனும் உன் பெயர் பொருந்தின் அவரிடர் நீக்கியருள் சீயென்க.

ஞானசம் பந்தசிவ நன்மனுக்கேட் டயர்வொழிந்து நலனே வாய்ந்த, மேனநெடு மாறருள மிளிர்நாம மேயெ ன்னை விழைவு மிக்கோ, ரானவரு மோம்பறியா ரரணீயே யலக்கண்விரிந் தடர்ப வஞ்சக், கானமிதிற் கைவிடினீ காக் குநரார் சேயடியேன் காவா யன்னே. (௩௫)

வாயிலார் மனக்கோயின் மன்னொளிர்நா மத்தாய்நீ வாய்மை யன்பர்க், கேயருள்வம் பாதகங்க ளேயுமுனக் கரு ள்கிலமென் றெனைக்கை விட்டால், தூயதுணை வேறிலைநின் றுணைவர்கொடு விடத்தினையுந் துரத்தி டாமற், சேயகளத தேன்றளித்தார் தீவினையேற் கம்முறையே செய்தாள் வாயே

## கஅ சிவநாம வணக்கம்.

ஆதிசைவ குலத்துவந்தாங் கருட்காசு பெற்றென்று மமலன் பூசை, * மாதரிற்செய் புகழ்த்துணையார் மனத்தொளிர்நா மத்தாயே வளர்கா மாதி, ஏதமிடர் புரியெனுளத் தீசனும்வாழ் கின்றனனீ யேதநீத்தந், நாதன்மனை துய்தாகு நலம்புரிவா னிணைப்பாவி நமக்கின் றேனே. (௩எ)

புறநோக்கா தகத்தளிசெய் பூசலா ருளத்தொளிரும் புனித வன்னே, அறநோக்காப் பாதகன்யா னுயினுநின் னருளென்பா லணுவுற் றாலும், இறைமாட்டு றுரையுஞ்சேர்த் திடுமணியர் தயவுற்று விதுபோ லுயேன், குறைதீர்த்துன் னுதனடி கூட்டுமென நினைப்பணிந்தேன் குறித்தாள் வாயே.

இறை மாட்டு உறுரையும்-அரசன்பக்கத்திற் செல்லுந்தரமில்லாரையும். அணியர்தயவுற்றால். அவ்வரசன் சமீபத்துள்ளார் தயவு கிடைத்தால். (அது) சேர்த்திடும்—அரசன்பாற் சேர்த்துவிடும். இது போல் நின்னருள் என்பால் அணுவளவுற்றாலும், நாதனடி கூட்டுமென நம்பியே உன்னைப்புகலாகப் பணிந்தேன். இவ்வுண்மை குறித்துக்கைவிடாது ஆள்வாயென்க.

திருநீல கண்டமெனுஞ் சிவநாம மனவரதந் திருநாவைத்த, திருநீல கண்டருளந் திகழ்சிவநா மத்தாயே சிவதன் மங்கள், தருஞானத் தவர்களுநின் சார்பாலே பயனுறுதல் சாத நின்னோர், தருஞான மொருவீடுந் தருமெனினின் பெருமகிமை சாற்றற் பாற்றே. (௩கூ)

23



திருஞான சம்பந்தர் திருப்பதிகத் தமிழ் வேதத் தெருண்ம நுக்கள். ஒருவாறியா ழிட்டிசைத்தா ருளத்தொ ளிர்நா மத்தாயே புணரா நாயேன், அருண்ஞான நெறிக்கருக னலன் கருமமாய்ந்திலன்மா சனைத்து முள்ளேன், வருசால் பொன் றிலனிரங்கி மலியருள்செய் வாய்நினையே வணங்கு கின்றேன். (சo)

திருஞானசம்பந்தர் ஆரியவேதத்துள்ள கோதுநீக்கித் தெளித் தெடுத்த மந்திரமயமான தமிழ்வேதமென்னுந் திருப்பதிகங்களை நீங்காமல் யாழிலிட்டிசைத்தவர் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார். கருமம் ஆய்ந்திலன்—செய்யத்தக்க உத்தமகாரிய மின்னதென்றுரா ய்ந்திலன். கருமம் மாய்ந்திலன் எனக்கொண்டு, கர்மமல முதலியன நீங்கப்பெற்றிலேன் எனினும், செயலறல் பெற்றிலேன் எனினும் அமையும். சால்பு—நற்குணம்.

அண்ணலருட் பாற்கடலுண் டருளுபமந் நியபகவா னடிகள் சூட்டிக், கண்ணான்முடி யிற்சிவதீக் கைம்முறையி னருண்மறுவாங் கருணைத்தாயே, எண்ணியுனை யுரையாம லெவரேனும் பிறரையழைத் திடுங்கா னின்போர், நண்ணில தற்கேயருடி நலம்பலவென் றுனுன்சீர் நவில்வார் யாரே.

# சிவநாம வணக்கம்.

அமந்திரபூ சாதிபய னற்றதென லறிந்தபின்வந் தடை ந்த கண்ணன், சமந்திரமாப் புரிந்துபயன் சாரவருளுபபதி யர் தமுள்வ யங்குஞ், சுமந்திரநா மத்தாய்நிற் றொழுமடி யேற் குறுமிடர்க டொலைத்தாள் கென்று, நமந்திரந்தே னவை நீக்கி நழுவாது நினையேத்த நலஞ்செய் வாயே. (சுஉ)

அமந்திரபூசாதி—சிவாகம விதிப்படி சிவதீக்ஷாதி சிவசம்ஸ்கார முறைகள் சிவாசாரியமுகமாகப்பெற்று அதன்மேல் அவராலுபதேசி க்கப்பெறும் மந்திரமின்றிச்செய்யும் சிவபூசாதிகளாம். சமந்திரம்—அத்தகையமந்திரங்களுடன் கூடியது. சுமந்திரம்—நன்மந்திரம்.

அக்கினியீ சுரர்பசிநீக் காரமுது நேரருளி யங்கை யிற் சீர், மிக்கசிவ லிங்கமுறு வித்தருளப் பெற்றவர தத்தர் மேதை, தக்கவுளத் தொளிர்நாமத் தாயேநீ நாயேனைத் தயைகூர்ந் தெம்மான், பக்கலினம் மன்பனிவன் பரிந்தருள் சென் றுரைத்தருள்வான் பணிகின்றேனே. (சுரு)

அக்நீசுரர்—கஞ்சனூர்ச்சிவாலயத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபிரான். இவர், தம்மையேசரணகப்பற்றித் தமதாலயவழிபாடு செய்துவருகின்ற அரதத்தருக்கு ஒருநாள் சுவர்ணபாத்திரத்திற் பாயசான்னங் கொடுத்தருளி சிவதீட்சாதி சிவஸம்ஸ்காரமுறையில் சிவலிங்கமுங் கொடுத்தருளினர். இச்சரித்திர விரிவை மேற்படியார் மான்மியத்தில் காணலாம்.

வயிணவமே தியர்குலத்து வந்துமுன்மா சறவவர்மான் மாறிச் சைவ, வியனெறிசார்ந் துபவனன்மேன் மேவியர தத்தருரை விமலத்தாயே, இயலமர்வாள் குறித்துவசி யென்பார்க்கு நன்பார்க்கு மின்பே நின்பேர், நயமுனியே யுரைக்கின்றே னடலையற நலங்களுற நல்குவாயே. (சுச)

முன்மாசு—முன்செய்த சிவத்துரோகம். அறவந்து—அது நீங்குதற்காகவே வைணவர் குலத்துவந்தவதரித்து. அனல்மேவி—நெருப்பிற்பழுக்க காய்ச்சி அக்கினி சுவாலிக்கின்ற இரும்புப்பீடத்திருந்து. விஷ்ணு, திரிபுரத்தசுரர் இறுகப்பற்றி நின்ற சைவநிலை நீக்கி அவர்களைப்புத்தர்களாக்கிய சிவத்துரோக நீங்கும்படி சிவாஞ்ஞையால் வைணவகுலத்து வந்து சுதர்சனநாமம் மாறி அச்சுதர்சனம் அரனால் கொடுக்கப்பட்டதென்பது விளங்க அரதத்தநாமம்பூண்டு அவ்வைஷ்ணவ நிலைநீக்கி எங்கெங்கும் சைவமே பரப்பினரென்பது முதலிய அற்புத சரித்திரங்கள் கஞ்சபுரமான்மியத்துள்ளன. அமர் செய்யும் வாளைக்கருதி ஒருவர் வசியென்று கூறினும் அவ்வாறு கூறியவர்க்கும், நன்பு ஆர்க்கும்—நன்மை முழுதும் நிறைக்கின்ற இன்பே—இன்பரூபியே. வசி—வாளாயுதத்துக்கும் பேராம்.

கல்லேறு புல்லுணச்செய் காட்சியினின் மாண்புலகங் காணத்தேற்றுஞ், சொல்லேறு மரதத்தர் துதியேறு சிவநாமத் தூய தாயே, எல்லேறுன் சீர்சிறிதோர்ந் தெண்ணுமவ னுந்தடையொன் றெய்தி லுண்பான், பல்லேறு தடையுறிற்கொள் படருறுமே னின்முழுச்சீர் பகரலாமே.

# சிவநாம வணக்கம்.

கல் நந்தியைப் புல்லுணச்செய்து, அந்தப்பிரத்தியக்ஷப்பிரமாண த்தாலும் சிவநாமமாகிய உனது மாண்புதேற்றிய கீர்த்திமிக்க அரதத்தர் என்க. உன்சீர் சிறிது தெரிந்து செபிக்கின்றவனும் அதற்கொரு தடை நேர்ந்தால் அவன், நிறையப்படைத்திருக்கும் அன்னத்தை உண்ணப்புகுந்த பசியாளனுக்கு பலதடையுறிற்படும் கஷ்டத்தை அடைவனேல், நின்னை இடையறாது செபித்தலால் வரும் பெருஞ்சுகத்தின் முழுச்சீர் பகராலாமோ—என்க.

கோவதைமா சொழிந்ததெனக் கூறுமர தத்தருளங் குலவு தாயே, ஓவறுகா மாதியதீங் குற்றிடரே முற்றிழைக்கு முடற்பி றப்பாம், பாவுகட லுள்ளாழ்ந்து படருறுவேற் கிரங்கிமுன்னோர் பௌவ முண்ட, தாவறுசீர்க் குறுமுனியித் தாழ்கடலு முண்டருள்வான் சாற்று வாயே. (சுசு)

பசுக்கொலைப்பாவம் சிவநாமோக்ஷாரணத்தால் நீங்கியதென்றருளிய அரதத்தரென்க. உடற்பிறப்பு—உடலொடுகூடும் பிறப்பு.

வயிணவரூர் தொறுஞ்சிவமாண் வயக்கியவர் தாமேசை வஞ்சார்ந் துய்வான், வியனலஞ்செய ரதத்தர் வியந்தோதுஞ் சிவநாம விமலத்தாயே, உயலறியாச் சேயிழிசேற் றுறி லெடுத்துக் கழீஇயணைத்தின் பூட்ட ருயர், செயலிருட்சேற் றெனையெடுத்துன் றிருவருணீர் முழுக்கியருள் செய்கிற் பாயே. (சஎ)

வருணனுதவியின் விரிந்த மறுகமைத்துக் கடற்சென்
றொருத்தன் மாண்பார், ஒருவனுழையரிற்குறிய னுதவியகங்
கையொடுக்கி யுண்டானென்று, அரியரர்மாண் புணர்த்துமா
தத்தர்புகழ் முன்னைமற் றவரை நாடாத், திரளுநிற் பரவு
மெனைத் தேவர்நரூ முறுப்பவருள் செய்தாள் வாயே. (சஉ)

கடலிற்போடு மலைமுதலியவைகள் அமிழ்ந்திப் போகாமல் தாங்கிக்கொள்ளவேண்டுமென்று வருணனை நோக்கித் தற்பசயானத் தமர்ந்து தவஞ்செய்து அவ்வரம் பெற்று அவ்வருணன் முதலியரு தவியால் அக்கடலிற் பெருவீதியாக அணையமைத்துச் சென்ற ொருவன்; மாண்பார்ந்தமற்றொருவனுடைய பக்கத்திலிருக்கும் ஏவலாளரெல்லாருள்ளும் மிகக்குறிய வடிவனொருவன் அக்கடல் முழுதும் உள்ளங்கையிலடக்கியுண்டான். வைஷ்ணவப் பெரியாரே இவ்விருவருள்ளே எவர் பெரியவர் நீங்களே கூறுங்கள் அவரை அடைவோமென்று அரி அர தாராதரம் விளக்கிய அரதத்தரென்க.

எழுகோடி மனுக்களுக்கு மிராசமனு வெனச்சுருதி
யெல்லாஞ் சொல்லும், வழுவாத நிலைநின்று வயங்குசிவ
நாமமெனும் வாய்மைத் தாயே, நழுவாமெய் யன்பர்களின்
னுமைவமு தனவரத நயந்துண் கின்றார், பழுதாரு மொருநா
யேன் பருகறியா துலைந்துனையே பணிகின்றேனே. (சக)

சைவநெறிக் கின்றியமை யாதுறுசா தனமெவைக்குந்
தலைமை வாய்ந்து, தெய்வநிலை மநுவாகச் சிறந்தொளிருஞ்

## உச சிவநாம வணக்கம்.

சிவநாமச் செல்வத் தாயே, உய்வதரு ஞானயலரிதெவ் வும்பர் பதங் களும்பெரிதே தன் றுன்னிலேனீ, செய்வதுநின் றிருப் பேரென் செந்நாவி லனவரதந் திகழ்த்த லொன்றே. (ருo)

சிவனெனுநா மந்தனக்கே யுரியனெனத் தமிழ்வேதந் தேற்றத் தோது, சவிதிகழுஞ் சிவநாமத் தாயேபன் பாக் கனைத்துந் தந்தும் பின்னும், எவையளித்தோ மெனப்பரிகின் றுயன்ப ரரியபணியாது செய்தோம், உவகையினிப் பேறெ ல்லா முதவினளென் றதிமகிழ்ச்சி யுறுகின் றுரால். (ருக)

வேதநான் குள்ளுயிராய் விரவிபியக் கலிற்காழி விமல வாழ்வு, வேதநான் கினுமுள்ள மெய்ப்பொருளீ தாமென்று விதந்து கூறும், நாதனு மத்தாயே நாயேற்குப் பிறப் பொழிக்கு நலத்தினின்பேர், நாதமன வரதமுமென் னுதரு வாழ் வுறவருள்வா னமக்கின் றேனே. (ருஉ)

பேர்நாதம்—நாமத்தொணி. நா தருவாழ்வு—நாவானது செபிக்கின்ற வாழ்வு.

புவியினிலூ ரியற்பரிவான் போந்துகயி லையிற்புகுவான் புரிவேங் தம்மாச், செவியினுற நவின்றருளுஞ் சிவநாமத் தொருதாயே நியேன் செய்த, நவைகள்பொறுத் தெவையு முணர் நாதனுநோக் காதருள்வா னவின்றுன் னேக்கே, அவனுமுறத் திருப்பியரு ளன்னேநிற் பணிகின்றே னடியய னேனே. (ருங)

# சிவநாம வணக்கம்.   உரு

புவியிற்செல்லும் இயல்பேயுள்ளகுதிரை வான்வழிச்சென்று கயிலையுட்புகும்படி புரிந்தசேரர்வேந்தர் அக்குதிரையின் செவியிற் கூறியருளிய சிவநாமத்தாயே, முற்றறிவனாகிய வுன் நாதனும் தீயவனாகிய என் குற்றங்களை நோக்காது பொறுத்துக்கொண்டு மேலும் அருளும்படிகூறி அந்நாதனும் உன் நோக்கத்துக்கே உடனாய் வரும்படி யருளுவாயென்க.

மேவுயிர்கண் மங்களமே வேட்பனவந் நிறைவருளும்
விறன்மிக் கோன்மா, தேவனெனுஞ் சிவநாமச் செல்வி
நினைப் பணிகின்றேன் சிறியே னாவில், ஓவறவீற் றிருந்தருள
லுன்னாத னுமையுடனென் னுளத்தி லென்றும், ஆவலின்மே
வுறுதலிவை யலதொருவேட் கையுமில்லே னருளு வாயே.

அருளலும் உறுதலுமாகிய இவை என்க.

இடையொழியா தொருபடித்தா யென்றுநிகழ் பரிசு
த்த மெனும்பொ ருட்டாய், விடையமலற் குரித்தாகி மிளிர்
சிவநா மத்தாய்நின் விழைவார் நோக்கால், அடியனுளத்
துன்னாத னமர்ந்திருக்க விடயாதி யழுக்கார் குப்பை, யுட
னுறுதன் முறையோவென் னுளந்தூய்தாம் வளஞ்சார்வா
னுளங்கொள் வாயே. (ருரு)

இருக்கவும் குப்பையும் உடனுறுதன்முறையோ......கொள்வாய் என்க. சிவ என்னுஞ் சொற்பொருள், எக்காலத்தும் எவ்விதத்தும் மாறாமல் ஒரேபடித்தாய் எப்போதும் விளங்கும் பரிசுத்தமென்பதொன்று.

# சிவநாம வணக்கம்.

உலகெலாஅந் தனிலொடுங்கி யுறலன்ப ருளமொடுங்கி யுறைத லாதி, நிலவுமாண் பொருள்விளக்கு நிமலசிவ நாமத் தாய் நீயெஞ் ஞான்றும், இலகுமா வெளியேனு விருத்தி யிடை யறுநிசைக்கு மிதஞ்செ யீது, விலகுறு நிலைபெறநின் மெய்யன்பர் சார்ச்சியுஞ்செய் வினையி னேற்கே. (ருகூ)

எளியேனது நாவிலிருக்கின்றாய். உன்னை இடையறாது செபிக்கின்ற இதந்தரும் ஈது—இந்நன்னிலைமை இடையூறுகளால் விலகாமல் நிலைபெறும்படி சிவநேசர் திருக்கூட்டஞ் சேர்ந்தொழுகும் நன்மை தருவாய் என்க. சிவ என்னுஞ்சொற்பொருள் கிடத்தல் என்பதொன்று அஃதாவது உலகெலாம் ஒடுங்கிக்கிடத்தல். உளமெலாஞ்சார்ந்து கிடத்தலென்க.

வெய்யமல வலியைமெலி விப்பதுசிற் சத்தியினை மிகுவிப் பாதி, செய்யபொரு ணிலைவிளக்குஞ் சிவநாமத் தாயே யென் சிந்தை வேறு, பொய்யினுறி னீயுமென புன்றுவை விட்டகறி புலைநா யேன்பின், உய்தலெலவன் றுய்கைவிடி னுலேசெய்க்கு வேறுபுக லுலகி லுண்டோ. (ருஎ)

விட்டகலாதிருந்து பொய்யினுறாது திருப்பி அருள்க என்பதெச்சம். சிவ எனுஞ்சொற்பொருள் மெலிவித்தல் மிகுவித்தல் என்பதொன்று. அஃதாவது மலசத்தியைமெலிவித்தல் ஞானசத்தியை மிகுவித்தலென்க.

# சிவ நாம வணக்கம். உஎ

எழுத்துநிலை மாறிவசி யெனினுந்தா னேயுலகெ லாநி
றைந்த, வழுத்தொளியென் பொருள்விளக்கு மாண்சிவநா
மத்தாயென் வன்னெஞ் சுன்னை, ஒழித்தூறினு மதன்வழிநா
வோதினும்வே றுகாமன் னுபக ராதி, மொழித்திறனு யரன்
பெயராய் முற்றுறுமா முன்னின்று முதஞ்செய்வாயே. ருஉ

என்னெஞ்சு உன்னை நீக்கி வேறொன்றிற்சென்றாலும், அந்நெஞ்
சின்வழியே நாக்கானது வேறொன்றை ஓதினாலும், ஆஹார உபஹார
என்பனவாதிய மொழிகளாய் ஹரன் பெயராய் முடிவுறும்படி நீயே
முற்பட்டு நின்றருளி இன்பஞ்செய்வாயென்க. வேறு ஓதினும் என
மாற்றுக. சிவ என்னுஞ்சொல் எழுத்துநிலை மாறி வசி எனினும் எவ
ராலும் வழுத்தத்தக்க பேரொளிஎன்னும் பொருள்தருவதொன்று.

சுரர்பிறராற் பெறுநலமச் சுரராயுள் வரையுளதாய்த்
துஞ்சும் வியா, அரனொருவ னேயென்று மழியாமங் களந்
தருவோ னமென் வாய்மை, எரிகரமேந் திப்புகலு மிறை
சிவநா மத்தாய்நின் னெழிற்ச ரண்சார், பெரியர்சர ணயன்
முதலோர் பேணிமுடிக் கொளினின்சீர் பேச லாமே. (ருக)

சிவ என்னும் சொற்பொருள், ஏனையர்மங்களம்போல் அவராயு
ளெல்லையில் அழிந்தொழிதல் போலாது என்றும் மாறாது விளங்கும்
நித்தியமங்களமென்பதொன்று.

உ அ சிவநாம வணக்கம்.

வேதசிவா கமங்களெலா மெய்ம்மனுவேந் திதுவிதனின் மேலொன் றின்றென், றோதுசிவ நாமத்தா யுனைப்பணிந்தே னினைப்பிரியா துறநா விற்கொள், மேதையர்கள் வேண்டி யன வேண்டியாங் குறப்பெற்று விளங்கு கின்றார், ஆதலி னப் பெரியவர்சார் படியேனுக் கிடையறா தருளு வாயே.

வேதமுடி பலவகையின் விளம்புபொரு ளொருநெறி சார் மெய்மை தேற்றும், காதைகண்மூ வாறுமெனல் காழி மணி சிவமுதலே கவினுற் றோங்கும், சூதஞெலி மாலையெ னத் துலக்குசிவ நாமமெனுந் தூய தாயே, ஆதரமிக் கன வரத மடியனினைத் துதித்துய்வா னருளு வாயே. (௬௧)

வேதாந்தங்கள் பலவாய்விரிந்து அங்கங்கே வேறு வேறு பக்ஷங்கள் கூறினும், அவ்வாறு கூறுதற்குரிய காரணப்பொருத்தங்காண் பார்க்குத்தாற்பரியமுடிவில் சிவநெறியொன்றையே சார்ந்து நிற்கும் உண்மையைக், காதைகள்--புராணங்கள், மூவாறும் தேற்றுமெனலைக் காழிமணி, “பூதமுதல்வன் முதலே முதலாப் பொலிந்த, சூதஞெலி மாலே என்றே கலிக்கோவை சொல்லே” என்று பெருவெள்ளத் தெதிரேற்றி யுண்மைகாட்டிய திருப்பாசுரத்தால் துலக்கியருளிய சிவநாமத்தாயே யென்க.

சிவநாம வணக்கம்

முற்றிற்று.

33

உ

சிவமயம்.

# சிவதயை வணக்கம்.

## காப்பு.

உலகெலாமுஞ் சிவதயைவாய்ந் துய்ய விடாது காமாதி, அலகி லிடர்கண் மலைமலையா யடர்ந்து வரினு மன்பொடு தன், மலர்மென் கமலத் தாள்பரவின் வன்னித் * துய் போன் மாய்த்தருளுந், தலைவன் சுமுக னமலனொரு தந்த னிருதா டலைக்கொள்வாம். *துய்—பஞ்சு

## நூல்.

சிவாயநம.

திருவாழ் வருளி வேதாந்தத் தெளிவிற் றிகழுஞ் சிவ தயையாம், ஒருதா யுனைப்போற் றுநர்க்கிம்மை யுறுவாழ் வம்மை நலன்மேலும், அருள்கூர் வீடுமயனாதி யமரரேவல் புரிநிலையும், தருமாண் புணர்ந்து பணிகின்றேன் சரணின் சரணே தமியேற்கே. (க)

மகேச்வராய நம.

ஈசநாம *முபபதமொன் றின்றித் தனதா யாடலைமை, பேசு சிவனார் † தயையனை பேணி யாங்கட் செல்கின்றாய், ஆசி லவண்மா லயனாதி யமரர் செல்வ நிமிர்தருமேல், தேசு தருநின் சார்வுபெறுஞ் சீலர் பேறார் செப்புநரே. (உ)

* உபபதம்—அடைமொழி. † தயை அனை—பண்புத்தொகை.

# சிவதயை வணக்கம்.

சம்பவே நம.

போற்று சுகந்தோன் றிடமென்னும் பொருள்சார்
சம்பு சிவதயையே, கீற்று மதிவா னதியிதழி கெழுமு
சடைமுக் கண்ணுமையோர், கூற்றுக் கோல மன்பர்கணோர்
கூட்டி யருடி யன்பறிவு, தேற்ற மிலனிற் பணிகின்றேன்
சிறியேற் கருள்வாய் செகதன்னே. (௯)

பிநாகிநே நம.

அதிவி யாத்தி முதன்மலைவில் லாத மலைவில் லவனென்று,
துதிபி நாகி சிவதயையே தூய சிவத்தி யானநிலை, மதி
யன் பினர்சி வாநுபவ வாய்மை யமுதார்ந்தொளிர்கின்றார்,
இதியன்பிலாத சிறியேனென் செய்கே நீயே யருள்வாயே.

ஒருவரிடத்து உள்ளதாகக்கூறும் விசேஷணம் அவரிடத்து மாத்திரமன்றி வேறிடத்துமிருக்குமானல் அவ்விசேஷணம் அதிவியாப்தி தோஷமுடையதாம். அந்த விசேஷணம் அவரிடத்தில்லையானல் அது அவ்வியாப்தி தோஷமுடையதாம். இங்கு, மலைவில்லவன் மலையாகிய வில்லையுடையவனென்ற விசேஷணம் சிவனிடத்தன்றி வேறிடத்தில்லாமையானும், அவனிடத்தென்று முண்மையானும், அதிவியாப்திமுதலியமலைவுஇல்லாத மலைவில்லை யுடையவனென்றும்.

சசிசேகராய நம.

ஞான தாதா வுந்தானு நன்மை விளக்கு மதிவேணி, யான
சசிசே கரசிவத யாவே பருவ நிலைக்கேற்ப, மேனநின்சார்

1262860 35



பாலயன்மால் விபுதர் பதப்பெற் றனர் பல்லோர், யான தொன்றும் வேண்டிலன்மெய் யன்பே நழுவா தருள்வாயே

இருளைநீக்கி ஒளியைப்பரப்பும் மதியை அணிந்தது, அஞ்ஞான இருளை நீக்கி ஞானஒளியைக் கொடுப்பவனுந்தானேயாகிய நன்மையை விளக்குமென்க. தாதாவுமென்ற உம்மை மோக்ஷதாதாவுந் தானேயாமென்பதை விளக்கும்.

வாமதேவாய நம.

கருணை யருளென் றொருநீபா கங்கட் கிசையப் பொது ச்சிறப்போம், புரியை யுலகர் சத்திபதிந் தோர்க்கு வாம தேவசிவ, பரம தயைநிற் பணிகின்றேன் பரமன் றனையு மியக்கியுயிர்க், கருளு மதுவே நின்னியல்பா மடியே னுரைத்தன் மிகையாமே. (௬)

உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் அவரவர் பக்குவங்களுக்கிசைய முறையே பொதுவிற்செல்லுங்கருணையும், சிறப்பிற்செல்லும் திருவருளும் புரிந்து ஓம்பும் உரிமையுடையையாகிய வாமதேவ சிவனது தயையே என்க. ஈசானுதி ஐந்து வகையில் வாமதேவ சிவச்செயல் காத்தலென்பது வேதாகம நூற்றுணிபு.

விரூபாக்ஷாய நம.

பால நடுவே றுருவவராம் பகனென் விரூஉ பாக்கசிவ, சீலதயைநீ விடமுண்ணச் செய்து சிவனை யமுதொன்றே, வால விபமுற் பெறவளித்தாய் வானோர்க் கவைவேண்

டிலனுயேன், சால நினையே போற்றியல்பு தளரா நிலையன் பருள்வாயே. (எ)

நெற்றிநடுவில் வேறு வடிவாயிருக்கும் வரம் அம்பகன் என்னும் பொருள் தரும் விருபாக்ஷநாம சிவனது தயை என்க. வேறுவடிவு மற்றிரண்டு கண்கள் போலாமல் () நெடுக்குவடிவாயிருத்தல். வரம் மேன்மை. வால இபம் முன்—வெள்ளை யானை முதலிய.

கபர்த்திநே நம.

வருகங் கையைத்தூய் தாக்குசடை மானென்
பொருள்சார் கபர்த்திசிவன், உரிய தயையே நின்வழிச்சார்ந்
தோர்க்கு நீல கண்ட நுதல், மருவு மனற்கண் முதற்றிகழும்
வடிவங் கொடுத்தி யஃதெளியேற், கருடி யெனற்கோர்
நலனுமிலே னைனீ சேய்நா னருள்வாயே. (அ)

நீலலோகிதாய நம.

உதவன் மறந்து சத்திசிவ னுருத்தி யானம் புருநடுச்
செய், விதியஃ தியற்ற வாங்கவுரு மேவு நீல லோகிதனும்,
துதிசெய் சிவத யாவேநின் றுளியொன் றிகாதி யனைத்த
ருள, மதிமற் றென்றவ் வெலாம்வெறுக்கும் வான்வீ
டருளு மாண்பென்னே. (கூ)

பிரமனுனவன், உதவல் மறந்து—(ஒருகாலத்தில்) சிருட்டிச்செயலை மறந்து திகைத்து, புருவநடுவில், சத்தியும் சிவமுஞ்சார்ந்த உருவம் நீலநிறமும், லோகிதம்—செந்நிறமும் சேர்ந்த நீலலோகித ருத்திரத்

# சிவதயை வணக்கம். ௫

தியானஞ்செய்தவிதி—அப்பிரமன், அஃது இயற்ற-அச்சிருட்டி தெரிந்து செய்தற்காகவே, ஆங்கு-அப்புருவநடுவில் அவ்வுருமேவும்-அவன் தியானித்த வடிவாய்த் தோன்றியருளிய நீலலோகிதனென்க. இவ்வுண்மையறியாத சிலபேதைகள், விஷ்ணுமகனாகிய பிரமனிடத்திற் பிறந்தவன் சிவனாதலால் இவன்விஷ்ணுவின்பேரனே என்று உலகம் நகைக்க உளறுதலை ஒதுக்கி உண்மை விளக்குவருயர்ந்தோ ரென்க.

சங்கராய நம.

சுயஞ்செய் சுகங்கள் சங்கரப்பேர் துலக்குஞ் சிவமாதயையேநீ, பயஞ்செய் வதுபீ மாதிபெய ராலும் விளக்குப் பரமனைநன், னயஞ்செய் வான்மெய் யன்பருக்கு நழுவாதென்றும் புரிந்தவனே, வயஞ்செய் கின்று யலக்கணெலா மாற்றி யடியேற் கருள்வாயே. (௪0)

அன்பருக்கு நயஞ்செய்யும்படி புரிந்து என்க.

சூலபாணயேநம.

இச்சை ஞானங் கிரியைகள்சார்ந் திடர்முற் றிரித்தின் பருள்வனெனல், மெச்சு சூல பாணிமொழி விளக்கு சிவமாதயையேநீ, நச்சு நினது தனையர்களி ளொருவன் கதியிலியாய்ப், பொய்ச்ச கத்தி னுலைவழகோ புன்கணொழித்தின் பருள்வாயே. கட்வாங்கிநேநம. (௪௧)

தெம்முற் றகற்றி யுலகோயப றெருட்டு கட்டு வாங்கி சிவ, மெய்ம்மைத தயையே தன்வயத்த விமலன் றனைநின் வயனாக்கி, இம்மை யம்மை வீட்டின்ப மெல்லா மன்பர்க்

# சிவதயை வணக்கம்.

இனிதருடி, பொய்ம்மைப் பவஞ்சத் துன்சேசேயேன் புன்க
ணுறுதன் மூறைபேயோ. (௧௨)

விஷ்ணுவல்லபாயநம.

அரியும் பரிக்கி ரகசத்தி யாதல் விண்டு வல்லபப்பேர்,
தெரிய விளக்குஞ் சிவதயையே செபதி யாணு திகட்குயிரன்
பொருவ லறப்பெற் றிலன்பெற்று ருடன்சார் நலனு முற்றி
லனீ, அருளி னலதுய் வுறலெவனின் னடிபோற் றெளியேற்
கருளுதியே. (௧௩)

பரிக்கிரகசத்தி ஒவ்வோர்காலத்தில் சிறிதுநேரம் கிரகித்துக்
கொள்ளும் சாமானியசத்தி. எப்போதும் பிரிவின்றி மலர்மணம்போ
லுடனிற்பதே சிற்சத்தி. அது தாதான்மியசத்தியென்பதாம். செபதி
யாணுதிகளுக்கு உயிர்போல்வது அன்பு; அத்தகைய அன்பை ஒருவ
லற-நீக்கமின்றி. இடையறாது நிகழப்பெற்றிலேன் என்க.

சிபிவிஷ்டாயநம.

பசுக்க ளெல்லா முந்தன்வியா பகத்து ளடங்கித் தொ
ழப்படுசீர், மிசைக்கொள் பசுப திக்தொல்சிபி விட்ட சிவமா
தயையேநீ, நசிக்க வருமென் பாதகங்க ளடி நாதன் முனி
யிளெனே, அசைக்கும் வினையின் வலியுரைத்தவ் வாற்ற
லொழிப்பா னருளன்னே. (௧௪)

அம்பிகாநாதாயநம.

மேய பூவின் மணம்போல விரவு தாதான் மியசத்தி, ஆய
வம்பி காநாத வமல சிவமா தயையே நீ, தூய பரமன் மல

# சிவதயை வணக்கம். எ

வழுக்குத் துதைபா தகனென் றெணமொதுக்கா, தேயும்
வகையின் னுரைகூறி யேன்று கொளுமா எருள்வாயே.(கரு)

ஸ்ரீகண்டாயநம.

நீறு மலிசெம் மணிநாப்ப ணீல மணிசா ரழகிதெனத், தேறு
மலிசீ கண்டசிவ தயைநீ தீனர்த் தேடியளித்,தேறு புகழீட்
டியல்பிணையா னேழை கதியற் றிறைஞ்சினனற், பேறு தர
ணின் கடனெனினும் பேதுற் றயர்ந்தே தினனன்னே.(கசா)

பக்தவத்ஸலாயநம.

விரவு மன்பர்த் தழீஇயருளல் விளக்கு பக்த வற்சலப்பேர்
மருவு சிவமா தயையேநின் வசதியாமப் பரன்விழையும்
உரிமை தேற்ற வோவிலடி யுறுகோ லடிகல் லெறியுமவன்
பிரியமுடனேபொறுத்தருள்செய்பெற்றிபுரிந்தாயுலகன்னே

வசதி—வாசஸ்தானம். பவாயநம.

நித்தி யாதி யருத்தங்க ணிலவு பவனுஞ் சிவதயையே
அத்தன் பூசா தியிற்பிரிய னவைசெய் யாரி லப்பிரியன்
புத்தி காமி யத்தொண்டிற் புகலவ் விரண்டு மிலனதனுல்
மெய்த்த கன்பிற்பூசாதிவிழுத்தொண் டேசெய் துயவருளே

புத்திகாமியத்தொண்டு (இம்மையின்பமும் மறுமைச்சுவர்க்காதி
யின்பமுமாகிய அநித்திய) போகங்களை விரும்பிச்செய்யுந்தொண்டு.

சர்வாய நம.

எவையுந் தன்னு ளடங்குறக்கொண் டிலகு சருவ சிவ
தயையே, சிவநி வேத னக்குரிய திவியா ரமுதங் காக்களித்

தாங், கவனுக் குரிய வுளமிருட்சார் பாக விடுத்தே னினி யுய்வ, தெவனிற் பணிந்தே னெளியேனவ் விருணீத் தொளி பெற் றிடவருளே. காக்கு—கழுதைக்கு. (கக)

திரிலோகேசாயநம.

உலகெலாமு முடைப்பதியா யொருங்காள் பவனென் பொருள்விளக்குந், தலைமைத் திரிலோ கேசசிவ தயையே பரமன் மதற்றகித்த, சூலகன் ஞேக்கும் புன்சிரிப்புங் குளி ர்ந்த முகமுங் கண்டெளியேன், மலகா மாதி மடித்தினருள் வாரி தோய்வான் வழங்குகவே. (உ0)

சிதிகண்டாயநம.

செய்ய நிறத்தோர் கரிதுறுமத் திறனு நோக்கா திரங் கியுல, குய்ய விடமார் சிதிகண்ட சிவமா தயையா முலகன் னே, அய்யன் மறையா கமங்களளித் தனைய நெறிநின் றினைதலொரீஇப், பொய்யி லின்புற் றுலகுய்யப் புரித லுனை ச்சார் பொற்பன்றே. (உக)

அய்யன் உனைச்சார்ந்த பொற்பினுலல்லவா அளித்துப்புரிதல் எனக்கூட்டுக.

சிவாப்பிரியாய நம.

பிரிவில் குணஞ்சார் குணியாமெம் பிரானே பெண்ணு ணுலகியலத், தெரிபெண் ணணிற் சிவைசிவப்பேர் திகழ்த்தி யனைய குணசிவைபாற், பிரிய முறுமச் சிவதயைநின் பிரவா கந்தோ யப்பரனைத்,தெரிய விளக்கி யெளியேற்குன் றிவியா ரமுதார் திறனருள்வாய். (உஉ)

உக்ராயநம.

அகமும் புறமு நெருங்குபகை யனைத்து முருக்கி யுயிர்க்கருளும், தொகுவன் மையன்று னெனுஞ்சுருதி துலக்குமுக்ர சிவதயையே, இகலில் விடைய வெந்நெருப்பி னிடர்ப்பட் டினையு மெளியேனைத், தகுநின் னருட்கை யெடுத்தணைத்தென் றுப நீக்கி யருளன்னே. காபாலிநேநம.

விதிகம் முகிரா லறுத்தகந்தை வீட்டி மால்செந் நீர்ப்பயிக்கம், அதிகம் பெயப்பா தியுநிறைவு றுக்கா பாலி சிவதயைநின், கதிசெய் பிரவா கம்பவஞ்சக் கழிசேற் றமிழ்ந்து மெனையிர்த்துத், துதிசெய் பரமன் பதநீழற் றாய கரையேற் றுவதென்றோ. விதி கம்-பிரமன் சிரம்-பயிக்கம்-பிக்ஷை.

காமாரயேநம.

எவ்வவர் மையருந் தனைக்கடக்கு மிகலின் றலையவகப் படுத்தும், அவ்வன் மதனை யுந்தகித்த வருட்கா மாரி சிவதயையே, ஒவ்வொர் பொருளின் விருப்புவெறுப் புற்றூங் கிடர்ப்பட் டுலைநாயேன், உய்வ தெவனின் சேய்தாய்நீ யொதுக்கா திடர்நீத் துயவருள்வாய். (உரு)

அந்தகாசுர சூதநாயநம.

காப்போற் காக்குங் கடவுளெனக் கழறு சுருதி முதல்வனிரை, மேய்ப்போன் முதலர்க்கிடர்விளைத்த விறலந் தகற்கொன் றுலகோம்பும், தாய்ப்போ லந்த காசுரசூ தனசி

வன்மா தயையேநீ, மீப்போ தன்பு தந்திடார்கள் வீட்டி யருள்வாய் வினையேற்கே. போல் வினைத்தொகை. (உசு)

**கங்காதராய நம.**

அகமிக் காரை யடக்கன்முத லாற்றல் வெப்பாற் றல் லடிக்கீழ்ச், சுகமிக் கார்தட் பந்தரான்முற் றுலக்கு கங்கா தரசிவனுள், அகமிக் காருந் தயையேயவ் வமலன் றுன்பின் பருள்வனொரச், சுகமிக் கார்வா னருண்மாநீ சொல்வா யெளியேன் றுரிசறவே. (உஎ)

அகந்தைமிக்காரை அடக்கல்முதலிய ஆற்றலும், பிறப்பிறப் பாதி வெப்பமாற்றலும் தட்பந்தரலுமுதலிய பொருள் விளக்கும் கங் காதரசிவனது உள்ளகத்தின்மிகுந்து நிறைந்த தயையே என்க.

லலாடாக்ஷாயநம.

உலகி லொருவ னலன்கடந்தோ னெனும்வா யுணர் த்து லலாடாட்ச,னிலவு நாம பரமசிவ விமல தயைநிற் பணி யடியேன், உலைதுன் பலையாழ்ந் நினைவுணர்ந்து மேம்பா யெனிற்றன் சேய்கதியற், றலையு நிலையு மிரங்கிலையென் றவனி புகலு மருள்வாயே. (உஅ)

உலகரில்ஒருவனல்லன்உலகெலாமுங்கடந்தவனென்றுண்மைநூல் களோதும் வாய்மையை நேரிலுமுணர்த்தும் லலாடாக்ஷசிவன்(நெற் றிக்கண்ணுள்ள சிவன்) ஒவ்வோருலகத் தலைவராகிய அரிபிரமாதி தேவர் முதலியர் போலாது கடந்து நிற்போனென்னுமுண்மை அத் தேவர்க்கின்றித்தனக்கேஉரியநெற்றிக்கண்நேரிலுமுணர்த்துமென்க

அடியேன் உலையுந் துன்பக்கட லிலாழ்ந் தினைதலை நீ அறிந்தும்ஓம்பாது கைவிடில் தன் சேய் கதியற்றலைகின்ற ஆபத்து நிலையிலு மிரங்காத வளென்று அவனி புகலுமாதலால் இப்பொழுதே அருள்வா யென்க.

காலகாலாயநம.

யாருந் தன்னு ணேயிற்கடவா விகற்கூற் றினையு முதைத்தருள்சீர், சாருங் கால காலசிவ தயைநீ நோக்கிற் பல்லமரர், சீரு மளித்தி சிறியேனத் திறம்வேண் டிலன்மன் சிவமநுவாய், ஒரு முறையோ துலைவினிலை யொன்றே யருள்வா யுலகன்னே. கிருபாநிதயேநம. (உ௬)

கருணை யருளென் பொதுச்சிறப்பாய்க் கலந்தா ருயிர்க்காங் காங்கருளும், கிருபை நிதியாஞ் சிவதயையே கிளர்நல் லறிவாற் றன்முதல, மருவி லேனிற் பணிகின்றேன் மற்றோர் புகலில் லேனீயே, அருளி னலதுய் விலனருள்வா யகிலத் திலங்கு நின்புகழே. பரசு ஹஸ்தாய நம. (௬0)

பரசு மவர்தெம் மடித்தருள்செய் பண்பு நிசமென் பதுவிளக்கும், பரசு காமர சிவதயையே பழுது புரிவேன் றெழுதறியேன். விரசு பாவி யெனைமுனியின் விடையன் புடையென் கடைமலஞ்செய், அரசு நிலையோர்த் திதமொழி சொற் றலக்க ணறுநோக் கருள்வாயே (௬க)

மிருக பாணயே நம.

அகில நலியப் பேரொலிசெய் யரிணங் காங்கொண் டவ்வொலியைத், தகுதன் செவியேற் றருளியசீர் தயக்கு மிருக

பாணிசிவன், மிருத யாவே யாகரச்சொல் விளம்பினேர்க்கு மாரநாமம், பகரும் பயனல் குனைப்பேணுப் பாவி யேனுய் பரிசென்னே. (நஉ)

அரிணம்—மான். மிருகம் என்பதும் அது. இடம் என்னும் பொருள் குறித்து ஆஹரம் என்று கூறினுர்க்கும்,ஹாநாம செபபலன் றரும் உன்னை என்க. சடாதராய நம.

அரிவை சார்வுற் ருர்வமுத லனைத்து மிரிக்கு மருந்த வனென், சுருதி தெரிக்குஞ் சடாதரனுந் தூய சிவமா தயை யேகாற், சரிதுய் போனீ யியக்கும்வழிச் சாரும் பாதந் திர ணனுர்கூர், பரிசு முறையன் றருள்கவெனப் பரமற் குரைத் தென் படரொழிப்பாய். (நங)

ஒருகணமும் பிரியாது அரிவையைச் சார்ந்திருந்தும், ஆர்வமுதல்--காமக்குரோத முதலிய குற்றமுழுதும் அடுத்தவர்க்கும் இரிக்கும் அருந்தவன் "ருத்ரோமகரிஷி" என்னும் சுருதிப்பொருளுண்மை தெரிக்கும் சடாதரன் என்க. சடை தவக்கோல முக்கிய சின்னமாதலிற் சுருதி மகரிஷி என்னும் சொற்பொருளை நேரிலும் விளக்கும் சடாதரன் என்பது காண்க. தயையே நீ அடியேனைக்குறித்துப் பரமனே இச்சிறியன் காற்றினுற் சஞ்சரித்துலையும் பஞ்சுபோல நீ இயக்கும்வழியிற் செல்லும் பாதந்திரனே யாதலால், இவன் அனுர்கூர் பரிசு-துன்பமிக்குலையுந் தன்மை ஞாயமன்று இவனுக்கு அருள்க வென்றுரைத்து என்படர் நீக்குவாயென்க.

சிரத்தி னிருத்தஞ் சிவைசிவனாற் செய்யப் பெறுசீர்த் தெனும்பொருண்முன், வரத்தி னிலவு கைலாசவாசி சிவமா தயையேயென், விரித்த பாத கங்களுனை வினையேற் சார விடாதகொடுந், தாத்த தெனினு மென்றீன தரநின் சார்பு தந்திடுமே. (ருச)

தயையே, என் அதிபாதகங்கள், உன்னை விமலனிடத்திருந்து எனக்குஅனுக்கிரகிக்கவரவிடாது தடுக்குமேனும், தீனதரம்—எனது மிக்க எளிமைத்தன்மையானது, அந்தோ இவன் ஒருகதியுமின்றி உலகின்றானென்றிரங்கி நீ அடியேனைச் சார்ந்து அருளுநிலைமை தந்திடுமென்க. கவசிநேநம.

திறன்மிக் குளரெவ் வெவராலுந் தீங்கு பாங்கு முறு தொழிதல், உறவர்க் கவைமுற் றொழித்தருள லுணர்த்து கவசி சிவதயையே, விறன்மிக் குறுபல் விடர்சூழ்ந்து மிகு பேரஞர்சார் கினுநின்சார், பிறையுற் றிடினவ் விடர்முழுது மிரித றிணமே யருள்வாயே. (ருரு)

எத்தகைய வீரராலும் எத்தீங்கும் தன்பக்கத்துமுறாது ஒழிந்து போதலும், தன் அன்பர்க்கு அத்தீங்கு முழுதும் நீக்குதலுமாகிய பொருளுணர்த்துங் கவசியாகிய சிவனது தயை என்க.

கடோராயநம.

சாந்த மேதன் னியல்பெனினுந் தறுகண் வினைத்தீ மையரையெலாங், காய்ந்து நீக்குங் கடோரநிலை காட்டு சிவமா தயையன்னே, தோய்ந்த வருக்கே துன்பொழிக்குந்

# சிவதயை வணக்கம்.

துணைத்தே கங்கை தோய்தரமற், ரேய்ந்த வருக்குந் துன்
பொழித்தி யுன்சீ ரெவரோர்ந் துரைக்குநரே. (௩௬)

திரிபுராந்தகாயநம.

அரியா தியர்க்கு மஞர்புரிமூ வரணந் தகித்த வருள்
விளக்குந், திரிபு ராந்த கந்நாம சிவமா தயைநீ சாரினுயிர்க்
காணன் றருளா திருக்கவுஞ்சா ராயே லருள வும்மாற்றல்,
மருவி லாணீ சார்ந்தியக்கி மாசற் றெளியே னுயவருளே.

விருஷாங்காயநம.

அடல்கூ ரிடப விலச்சினைசார்ந் தனிர்திண் கொடிசே
ரங்கரனும், இடபாங் கப்பேர்ச் சிவதயையே யிந்து நதிபொ
ன் னிதழிமுடி, உடனு ருமையம் பிகைவாமத் தொளிரும்
பாமன் றிருக்கோலம், அடியே னுளக்க ணைஞ்ஞான்று
மசையா திலகவருள்வாயே. விருஷபாரூடாயநம.

தரும பீடத் துறண்டத்த ரூனே யெனுநூல் வாய்தே
ற்றுந், தரும விடபா ரூடசிவ தயையே பலபா தகஞ்செ
யெனைத், தரும நலஞ்சார் பரன்முனியிற் றுங்கதில்லே னுங்
குநிறை, தருமவ் வனலே நின்னமுதோ ததியாற் றவிர்த்தின்
பருள்வாயே. பஸ்மோத்தூளிதவிக்கிரகாயநம. (௩௭)

எல்லாந் தன்பா லொடுங்குறத்தா னெஞ்சா துறலத்
துவிதார்த்தஞ், செல்லா றுணர்த்து பசுமோத்தூ ளிதவிக்
கிரக சிவதயையே, ஒல்லா விடயத் தலைகின்றே னுனைவேட்

டுய்யு நெறிதேடு, கில்லே னெவனுய் குவல்வினைநீ கிடைத்
துத் துடைத்நின் பருள்வாயே. (சும)

நெருப்பிலுற்ற எப்பொருளும் நீறுதலால் அப்பொருளெலாம் அந்நீற்றில் ஒடுங்குவதும் நீறுஒன்றிலும் ஒடுங்காது மிஞ்சி நிற்பதும் யாவரும் நேரிலறிந்தனவே. இத்தகைய நீருகிய பஸ்மத்தைச் சிவபிரான் திருமேனியில் உத்தூளித்திருத்தலால் எல்லாமுந்தன்னில் ஒடுங்கலும் தான் ஒன்றிலும் ஒடுங்காதுறலும், மேனியும் பஸ்மமுமாகிய இருபொருளுப் பிரிவின்றி விரவி நிற்றலால் அத்துவிதமென்னும் சொல்லின் பொருளுண்மை செல்லுமுறையும் உணர்த்தும் பசுமோத்தூளித விக்கிரக சிவனென்று கூறியதென்க.

சாமப்பிரியாயநம.

இரக்க முறுமா வரக்கனழற் கிரங்கிப் பிரியத் தினி
தளித்த, தாத்த சாமப் பிரியசிவ தயையே யெவர்க்குங்
கதியளிப்போன், ஒருத்தன் சிவனென் பஃதுணரா துறவு
மனையா நியகதியென், றருத்தி புரிந்தே யவர்க்கெளியே
னரணென் றலைந்தே னருள்வாயே. (சக)

ஸ்வரமயாயநம.

பொருண்மாண் பலசேர் சுரமயனும் புநித சிவமா தயை
யேயான், பொருளோர் சிவனே யெனுஞ்சுருதி புகலுப்
பெரியார் புடையடைந்து, மருணீத் தரிய சிவானந்த வாரி
தோய்ந்துய் வுறவிழைந்தேன், மருளா துனையே பணிந்த
னைய மாண்பு பெறுவா னருளன்னே. (சஉ)

# சிவதயை வணக்கம்.

திரைமூர்த்தையே நம.

மூவ ராயு முள்ளமர்ந்து மூன்று தொழிலுந் தான்புரிமா, தேவ னாய திரைமூர்த்தி சிவமா தயையே சிவ * னருள, வாவிப் பணிந்தின் புறமாட்டா மடனால் விடயக் காட்டனல் சூழ், சாவு ளகப்பட் டுலைகின்றேன் றாயே யருள்வாய் தமி யேற்கே. * அருள் அவாவி எனப்பிரிக்க. (சஙூ)

அநீச்வராய நம.

தன்னின் மேலின் றெல்லாமுந் தானே யாளு முழுத் தலைமை, மன்னு மநீச சிவதயைநீ பணுதி களைநா யேற்களி த்தாய், உன்னி யுய்வா னளித்திலையன் புயிரில் கன்னி மண முறுமோ, பன்னன் பிலாவென் மனுதியரன் பாலிற் செலு மோ பரிந்தருளே. (சச)

நாயேற்கு மனம் வாக்குக்காய முதலிய கருவிகளைத் தந்தாய் அவற்றால் நினைத்தல் துதித்தல் வணங்கல்களைச் செய்தற்குறியதாய் அவற்றிற்குயிராயுள்ள உண்மையன்பு தந்திலை. உயிரில்லாத கன்னி மணம் பெறுவளோ? அதுபோல் உயிராய அன்பில்லாத என் மனு திகள் அரன்பாங்கு செலுமோ? அம்மே பனுதிதந்த நீயே பரிந்து அன்புந்தந்தருள்வாய் என்க. சர்வஞ்ஞாயநம.

அறிவித் தொன்றென் றுவறிவார்க் கனைத்து மொரு க்கே யறிந்தெங்குஞ், செறிவுற் றிலகுஞ் சர்வஞ்ஞ சிவமா தயைநீ சிவனடியே, குறியுற் றணைந்தோ ரவர்நோக்கங்

# சிவதயை வணக்கம். 

கொளப்பெற் றோர்கள வெவருமலம், பறியுற் றழிவி லின்
புறச்செய் பரிவிங் கெளியேன் பாலுறுமோ. (சரு)

அறிவார்க்கு—(சடமாகாது) அறிவித்தால் ஒன்றொன்றாக அறியுஞ்சித்தாகிய சீவர்க்கு அறிவித்து...ஒருங்கறிந்து எங்கும் நிறைந்து விளங்கும் சிவனென்க. பரமாத்மநேநம.

அயன்மா லாதி பலகோடி யான்ம விதயத் தமர்ந்தியக்
கும், வியனார் பரம வான்மசிவ விமல தயைநிற் பணிகின்
றேன், செயலா ரரியா தியர்பதமிச் சித்தி லேன்மெய் யன்
பர்பணி, நயனார் தரச்செய் துய்யுநிலை நாயேன் பெறுவா
னல்குகவே. சோமசூரியாக்கிநிலோசநாயநம.

தேம னொளிமுச் சுடர்க்கருளிச் செகமுற் றிருணீத்
தொளிதரச்செய், சோம சூரி யாக்கினிலோ சனனுந் தூய
சிவதயையே, தீமை நீக்கி நினைநோக்கிச் சிவப்பே றுறு
மாண் பறியாதேன், நீம னிரங்கி யெளியேனன் னிலைநின்
றுயுமா வருளன்னே. (சஎ)

அவிர் யஞ்ஞாயநம.

எந்த வுலகில் யார்செயினு யாக மெவைக்கு முதலெ
ன்று, செந்த ணூல்சொ லவிர்யஞ்ஞ சிவமா தயையே தீவி
னையேன், உந்து பதஞ்சார் தவமில்லே னுனையே பணிந்தே
னுலகன்னே, சிந்தை சிவன்பாற் செலுத்தறிஞர் திருமுன்
பணிசெய் திறனருளே. (சஅ)

# ௧அ  சிவதயை வணக்கம்.

அவிர் யஞ்ஞம்—அவி முதலிய ஆகுதியுடன் நிகழும் யாகம். யஞ்ஞசிவன் — யாகமெவைக்கு முதல்வனென்று வேதாகமாதிய செவ்வியதண்ணிய நூல்கள் கூறும் யாகத்தலைவனாகிய சிவனென்க.

பீமாயநம.

அறனே புரிக மறனொழிகென் றாணை வடிவுங் கண்ட
ஞ்சி, மறவா துலகர் கொளப்பயமார் வடிவுங் காட்டும் பீம
சிவ, நிறைவார் தயையே மெய்யன்பு நிலையர் நிமலற் சார்ந்
தின்பத், துறைதோய் கின்றா ரவர்ச்சாருந் தூய்மை யரு
ள்வா யெளியேற்கே. (௪௯)

அறமே செய்க. மறம் செய்யாதொழிக என்று வேதாகமாதிக ளால் விளக்கும் தனது ஆணையை, உலகர் தன்வடிவுங்கண்டு மேற் கொண்டு செய்யும்படி பயங்கரவடிவங்காட்டியருளும் சிவனென்க.

சம்யாக தராயநம.

ஓமைந் தெழுத்துக் குரியசிவ னொருவ னேயாம் பதி
யெனுநூல், வாய்மை விளகம் பிகளிதழ்நேர் வயக்கு மிதழி
வனைந் தோனுந், தேமன் சம்மி யாகதர சிவமா தயையே
சிவனின்வய, னாமென் றுணர்ந்தே யுனையடைந்தே னடியே
னிடர்தீர்த் தருள்வாயே. (௫௦)

பிரணவசகித ஐந்தெழுத்துக்குரிய சிவனொருவனே பரமபதியா மென்று வேதாகமாதிநூல்கள் கூறுமுண்மையை, அப்பிரணவமே போல் விளங்குள்ள கம்பிகளும் ஐந்திதழ்களும் நேரே விளக்கும் இதழி என்க.

சோமாயநம.

என்றும் பிரியா வுமைசகனு யிலங்குஞ் சோம சிவத யையே, பொன்றல் பிறத்த லிடைப்பட்டுப் புன்க ணுறுதீ வினைநீக்கி, நன்றி யருளுஞ் சிவபானை நணுக வொட்டா விடானைத்துங், கொன்று நாயேன் சிவச்சார்பே குறிக் கொண் டுயுமாண் பருளன்னே. (ருக)

பஞ்சவக்திராயநம.

பரவைந் தொழில்செ யைம்முகத்தெம் பரனும் பஞ்ச வத்திரப்பேர், விரவு சிவமா தயையேயவ் விமலன் முழு தோர் பவனையும், வருமன் புடையார் பிழைநோக்கா வகை செய் தருள்சா துரியநிலை, மருவு நீயென் பிழையனைத்து மாய்த்தன் புறுமாண் பருள்வாயே. (ருஉ)

சதாசிவாயநம.

உருவ வருவ நாப்பணுறீஇ யோது மவ்வெண் வகை தன்பான், மருவு மாநின் றனவாத மங்க ளஞ்செய் சதா சிவன, துரிய தயையே நம்பானன் புடையார்த் தொடர் ந்து பணிசெயுமா, புரிநின் றிறலார் புகல்பவரென் புன்மை நீக்கி யருள்வாயே. (ருங)

விசுவேச்வராயநம.

சருவ பூதாநா மீசன் றனென் றெசுர்வே தம்புகலும், அரிய விசுவே சுவாசிவ னமலை தயையே மான்கன்றுன், றெரிகட் புலிவா யிடைப்பட்டாங் கெளியேன் பவஞ்ச வவ

லாழ்ந்து, பரித னின்சீர்க் கழகாமோ படர்முற் றொழித் தாள் வாயன்னே. (ருச)

"ஈச்வரஸ்ஸர்வபூதாநாம்" என்று எசுர்வேதங்கூறுகின்றது. இத ற்கு (அரிபிரமாதி) சகல சீவர்களுக்கும் தலைவனாகிய ஈசுரன் என்பது பொருள். அவல்—பள்ளம்.

வீரபத்திராயநம.

அரியா தியர்மங் களம்போலீ ருகா வீர மங்களமே' பரிவாற் றொழுவார்க் கருள்வீர பத்தி ரப்பேர்ச் சிவதயை யே, இரியாத் துயருற் றினேகின்ரு னிவனேன் றிரங்கி யின் னருணீ, புரியா யெனில்வே றாணில்லேன் புன்க ணொழித் தின் பருளன்னே. கணநாதாயநம. (ருரு)

இருளற் றடிசேர்ந் தவர்சேரு மினத்தர் முதல சிவ கணங்கட், குரிய தலைமை யுணர்த்துகண நாத சிவனுள் ளூறுதயையே, பரம னெளியேற் கருள்கிலனேற் பவமுற் றொழிப்போ னெளியவருக், கருள்வ னெனுஞ்சீர்க் கது மூரண மறிவித் தடியேற் கருள்வாயே. (ருசு)

அடிசேர்ந்தவர் இனிச்சேருமினத்தர் முதலியராகிய சிவத்துவம் பெற்ற திருக்கூட்டத்தார்க்கு உரிய தலைமை என்க.

பிரஜாபதயேநம.

அயன்மான் முதற்பல் வகைப்பிரசைக் கதிப னெனு மாண் பெசுர்வேதம், வியனுர் பசூநா மதிபதிப்பேர் விளக்கு பிரசா பதிதயையே, உயவோ ருபாய மோர்வறியே னொழி

வில் பதக னீயேயச், செயலோர்ந் தியக்கு சருவஞ்ஞை
சிறியேற் குணர்த்தி யருளன்னே. (ருஎ)

இரண்யரேதசேநம.

உருவ னெனினுஞ் சுரர்பிறர்க்கூ ழுருவந் தருவ னாருளே
உருவ னெனல்பொன் வீரியத்து முணர்த்து மிரண்ய ரேத
சுவாய், அருள்செய் சிவமா தயையேநீ யரணி லேழை யரை
த்துருவி, அருள லுனது கடனவரு ளதிக னடியே னருள்
வாயே. கிரீசாயநம. (ருஅ)

மலைக ளெவையும் பணிகயிலை மலையா ளிறையென்
பொருள்வயக்கும், நிலைய கிரீச சிவதயைநீ நிமல னுய மதி
யில்விரி, தலைமை நிலவே சமலமதி தருதண் ணில வெங்
கணுமுறுந்துாய், நிலையென் னிடையென் றென்பாங்க
ரெய்தா தொழிதன் முறையேயோ. (ருகூ)

கிரிஜார்த்ததேகாயநம.

அருளே யுருவாய்க்கிரியுதித்த வனேயோர் பாதி யினிற்
சாருந், திருமே னியனுங் கிரிசார்த்த தேக சிவமா தயைய
னேயே, ஒருவா மதியத் தோணிமுத லுறுநம் பானும் பேரி
ன்பப், பெருநீர் மூழ்கி யின்புறுவான் பேதை யேற்கு மரு
ள்வாயே. அநகாயநம. (சூ0)

நிகமா கமமா தியமெய்ந்நூ னிகழ்த்து தூய நிலைக்கி
சைய, அகமா விகளுக் கொழித்தல்விளக் கரிய வநக சிவ

தயையே, சுகமா ரன்பார்க் கருள்செயச்சார் தூயன் கடைக்க ணேக்குறுமத், தகுமா நெறியி லெனையிருத்தித் தமநீத் துயுமா வருள்வாயே. புஜங்க பூஷணய நம. (சூக)

கொடிய ரெனினுந் தீர்த்தேன்று கொளுமாண் புயங்க பூடணப்பேர், நெடிது விளக்கு சிவதயையே நிகழெண் குணனு நின்மலனும், படியி லுன்சார் பாற்சுகஞ்செய் பவனென் பெயர்பூண் டஃதென்றும், ஒடிவி லாது செய்தருளி னுன்சீ ருரைத்தற் கொல்லுவதோ. (சூஉ)

பர்க்காயநம.

சவிதா நாப்ப ணமர்ந்தவற்குஞ் சவிதந் நியக்கும் பேரொளியே, நவில்கா யத்தி ரிக்குரிமை நாட்டு பர்க்க சிவதயையே, உவர்மா விடமு முணச்செய்தா யொளிமெய் யிறைவன் றனை யென்னைத், தவமா யிருளு முண்டொழித் தென் ருப நீப்பான் சாற்றுதியோ, (சூ௩)

சவிதா—சூரியன். அவன் மத்தியிலிருந்து அவனுக்கும் சவி—ஒளிதந்து அவனையும் நடத்தும் பேரொளியாகிய சிவனே, காயத்திரி மந்திரத்துக்குரிய பொருளாயுள்ளவனென்னும் உண்மையை வேறெந்த வாதிகளாலும் அசைக்கவிடாது நிலை நிறுத்துகின்ற பர்க்க நாமமெனக. பர்க்கன்—ஒளியினன். தவ—மிகவும். மாய்—மறைக்கின்ற.

கிரிதந்விநேநம.

என்ன திறலர் களும்வளைத்தற் கெண்ணு தலுமின் மேருகிரி, தன்னை வளைத்தக் கிரிதநுவங் கையி னேந்து சிவ

தயையே, மன்னு சிவனே முதலவன்சை வத்தூ நெறியே மோக்க *நிபம், என்ன லோர்த்தா யசைவறநன் றியற்றி யுயச்செய் திலையென்னே. *நிபம்—காரணம். (௬௪)

கிரிப்பிரியாயநம.

தாணு வெனுந்தன் போலசைவி றகைசார்ந் தென்றும் வளந்தந்து, சேணு மகல் *சா மியத்தாற்கொல் கிரிப்பிரிய ஞுஞ் சிவதயைநிற், பேணு மடியேன் மாசிரிக்கும் பெரியார் திருமுன் னருளுக்கம், பூணு மாவெற் சேர்த்திதுவே போது மெளியேற் கருளன்னே *சாமியம்—ஒப்பு. (௬௫)

கிர்த்தி வாசசேநம.

† உருத்தந் துலகுக் கிடர்செய்கரி யுரித்துத் துகிலாப் போர்த்தருளுந், தாத்த கிர்த்தி வாசசிவ தயையே நினக்கே ழையரிடர்கள், இரித்த றொழிலே யடியேனை யிடர்பற் பல சூழ்ந் திகவாமல், வருத்த லுணர்ந்து நின்றொழிலென் மட்டி லொழிதன் மாண்பாமோ. † உரு—அச்சம். (௬௬)

புராராதயே நம.

தனைப்பூ சிப்பா ருப்பிறர்போ தனையான் மாறி னவர் பகைதான், எனப்பாற் றிடும்பு ராராதி யென்னுஞ் சிவமா தயையேநீ, அனைத்தோர் பரம னெளியேன்பா தகநோக் காம லருளுறவவ், வினைச்சார் பொழித்தன் பினர்ச்சார்பு மேவு நலனே விழைந்தருளே. (௬௭)

# உ௪ சிவதயை வணக்கம்.

தன்னைப்பூசிப்பவராயினும், அவர்கள் பிறருடைய போதனையால் அந்நெறிமாறின் அவர்க்குத்தானே பகைவனெனத் தானுமாறிநின்று அவர்களை அழிப்பவனென்னும் பொருள் விளக்கும் புராராதி என்க.

பகவதே நம.

சருவஞ் ஞாதி யாறுகுணந் தனக்கே யுடைய பகவ சிவ, பரன தயைநின் னன்பர்பகை பாற்றற் கரனை யேவுதி யவ், வானப் பகையச் சுற்றிரியும் வன்மை செயலாற் பிமன்முதல், உரிய பெயருற் றனனின்சீ ருரைத்த லெளி தோ வுலகன்னே. ப்ரமதாதிபாய நம. (௬௯)

கயிலை நிறைவாழ் வுறுபூத கணங்க டலைவ னெனல்விள க்கும், இயல பிரம தாதிபப்பே ரிலங்கு சிவமா தயையேநீ, உயு மெய்ந் நெறிவே தாகமங்க ளோது சைவ மேயெனும் வாய், நயனுய்த் துணர்ந்தா ரன்பர்பணி நாயேன் புரிவா னயந்தருளே. மிர்த்தியுஞ்சயாயநம. (௬௯)

எந்த வுயிருங் கவர்திறற்கூற் றினையுஞ் செயித்தோ னெனும்பொருடந், துந்து மிருத்தி யுஞ்சயப்பே ரொளிருஞ் சிவமா தயையனையே, புந்தி யிலேனென் பிழைநோக்கும் போதப் பரனை யறிவிலனிம், மைந்தன் பிழைநோக்காதரு ள்க வள்ளா லெனவோர்த் தருள்வாயே. (௭0)

சூக்ஷுமதநவேநம.

சடமா மாயா தநுவினுட்சே தனவா ருயிராஞ் சூக்கவு டல், இடமாக்கொடுசூட் சுமதநுவ னெனவாழ் சிவமா தயை

யன்னே, யடியேன் பவஞ்சங் கடந்துய்வா ஞைசை மலிந்தே
ணிடர்முழுதென், புடைசார்ந் தலைப்ப வாற்றகிலேன் புன்க
ணொழித்தின் பருள்வாயே. (எக)

ஜகத்வியாபிநேநம.

செகமெலாமு நிறைந்தியக்குஞ் செகவி யாபி சிவத
யையே, தருமெய் யடியா ரும்பரனுஞ் சார்ந்தா ரிடைச்சார்
பிழைசிறிதும், அகனிற் கொளாம லவரன்பா மரிய குணமே
பெரிதாக்கொண், டிகவி னலனே யருள்கின்றா ரிதுநின்
சார்பி னியல்பன்னே. (எஉ)

அடியாரும் பரனும், தம்மைச்சார்ந்தாரது பிழைசிறிதுங்கருதா
மல் அன்பையே பெரிதாக்கொண்டு நீக்கமில்லாதநலனேயருள்கின்
றார். இது தயையாகிய உன்சார்பினியல்பென்க.

ஜகத்குரவேநம.

உலகிற் குரவ ரனைவருப்போற் றொளிகூர் குரவன்
றானேயாம், நிலைநன் குணர்த்து செகத்குருவா நிமல சிவமா
தயையேநீ, அலகி லாதோன் மறைதிகடந் தவனும் பரனை
யன்பர்புரி, மலர்பூ சாதித் திருத்தொண்டின் வயங்கப் புரி
நின் மாண்பென்னே. வியோமகேசாயநம. (எங)
கேசி சிவனே வானிமிர்தல் கெழுவுமசாதா ரணசுவண, தேசி
னியல்முன் னவ்வுண்மை தேற்றா வியோம கேசசிவ, நேச
தயையே நின்வசனாய் நிமல னியங்கச் செயுநீயவ், வீசன்
றனையென் னுளத்திருத்தி யிடர்முற் றிரித்தின்பருள்வாயே

## உகூ சிவதயை வணக்கம்.

கேசிஎன்னுஞ்சொற்பொருள் சிவனேயாம். அவ்வுண்மையை அக்கேசம், மற்றையர் கேசங்கள்போலாது மேல் நிமிர்தலும், சுவர்ண தேசினியலும், அடங்காது விரிந்து பிரவகித்தகங்கை ஒருதுளியள வினடங்கித்தன்நுனியுளடங்கச்செய்தலு முதலியஅசாதாரணமகிமை களே தேற்றுகின்ற வியோம கேசசிவனென்க, அசாதாரணமகிமை வேறெங்குமின்றித்தன்னிடமேயுள்ளமகிமை,

மகாசேனஜனகாயநம.

அமர ருயவப் பகைமாய வனற்கட் டருசேய் தாதையே னல், விமலமகாஅ சேனசனகப்பேர் விளக்கு சிவதயையே, நமவென் னுளத்திற் சாமாரி நண்ணிற் காமா திகள்சாரா, சமல மகனும் விமலமுறுந் தாயே நாயேற் கருள்வாயே, எ௬

சாருவிக்கிரமாயநம

மெலியர்ப் புரத்தல் வலியர்முரண் வீட்டி யருளன் முதனலனே, அலதொன் றுருமை யின்னெழில்வல் லப ணுஞ் சாரு விக்கிரம, நிலைய சிவமா தயையேயா னின்னு தன்னேக் குறவொட்டா, வலிய வினைதீர்ந் தாசறுது வழி நின் றுயுமாண் பருளன்னே. ருத்ராயநம. (எகூ)

இன்ன லொழிப்போ னெனும்பொருளே யியைந்தின் பளிப்போ னெனருனே, மன்னு சீருத் திரசிவன்றன் வய ங்கு தயையே வணங்கெளியேன், நன்ன ரிறைவ னருளுரு வே நழுவா தகத்தும் புறத்தினுங்கண், டுன்னி வணங்கிப் பரவுநல னொருவா துறுவா னருள்வாயே. (எஎ)

பூதபதயே நம.

ஓது பசுக்க ளெவற்றினையு மொருவா தியக்கும் பசுபதி யென், பூத பதியாஞ் சிவதயையே போந்து பால்வேட் டமுபாலன், மாத குததி முழுதுண்டல் மலைய முனிகைக் கடலொடுங்கல், ஆதி புரிநிற் கடியேற்சா ரலக்க ணொழித்த லரிதேதயோ. ஸ்தாணவே நம. (எஅ)

ஐந்து வகைய பெருந்தொழில்க ளளவில் விரிவிற் புரிந்துமசை, வெந்த விதத்து முருத்தாணு வென்னும் பரம சிவதயையே, இந்து முடிமூ வைந்துவிழி யீரைங் கரங்க ளைம்முகமென், சிந்தை சலியா தெஞ்ஞான்றுந் திகழ வருள்வாய் செகதன்னே. திகம்பராய நம. (எகூ)

எங்கு நிறைந்தோ னெப்பொருளி னியல்புந் தனைப்பற் றுதவனென், துங்க முணர்த்து திகம்பரப்போர்த் தூய சிவமா தயையேநீ, பொங்கு கூற்றந் தீமை குறீஇப் புரிதுன் பணுகா தெஞ்ஞான்றுந், திங்கள் முடியோன் பூசனைமுற் றிருத்தொண் டொருவாத் திடனருளே. (அ0)

அஷ்டமூர்த்தயே நம.

ஐந்து பூத முயிர் சுடர்க ளாமெண் மூர்த்தி களையியக் கும், அந்தண் மூர்த்தி மானெனுஞ்சீ ரட்ட மூர்த்தி சிவதயையே, யிந்து வதனத் துமையம்மை யிடனார் கோலத் திறையெளியேன், சிந்தை யொருவாத் திறனருளிச் செல்ல லொழிப்பாய் செகதன்னே. (அக)

# ௨அ சிவதயை வணக்கம்.

அநேகாத்மநே நம.

ஒருவ னுபு மளப்பிலவா முயிர்க டொறுமன் னநேக
னென, விரவு சிவமா தயையன்னே வேளை யெரித்துக்
கூற்றுதைத்த, பரனம் மதன்செய் படரென்பாற் படரா
நலனு மக்கூற்றென், அருகு றுத நிலைமாண்பு மடியேற் கரு
ள்வா னறைவாயே. சாத்விகாய நம. (அஉ)

அயன்மா லியற்கை யிராசததா மதமே யவைமேற்
சாத்துவிகச், செயலா ரியற்கைச் சிவதயையே சிறியே நினை
யே பணிகின்றேன், உயவோர் கதியற் றவர்த்துருவி யுதவு
கிற்றி யடியேனவ், வியலா ரொவக்குங் கடையவனு மெனை
முன் புரத்த னின்கடனே. (அங)

உயல் ஆர் கதி—உய்தலைப் பொருந்துதற்குரிய கதி. நிற்கு இயல்பாமென்றியையும். அவ்வியலார்—அக்கதியற்ற இயல்பினர்.

சுத்த விக்கிரகாய நம.

மூலப் பகுதி யில்லுருமான் முதலோர்க் களிக்கும் பரன்றா
ய்மை,சாலத் திகழ்பேரருளுருவன் றனென் சுத்த விக்கிரக
வாலச் சிவமா தயையேயான் மறுதி களிற்செய் பாதகங்கள்
போலப்பிறிதொன்றிலையன்னேபுகல்வேறிலைநீயேருள்வாயே.

சாஸ்வதாய நம.

தத்த மாயு ளெல்லையரி தனைமுன் னேரைத் தனிலொ
டுங்க, வைத்தெஞ் ஞான்று நித்தியனாய் வயங்கு சாசுவத

சிவனே, உய்த்தன் பருக்கின் பருடயையே யுறுகட் பவஞ்சத் துலேயாதெற், பொத்து மலநீத் துய்வுறுமா புரிவாயனேநின் பொன்னருளே. கண்ட பரசவே நம. (அரு)

திருந்தார் திருந்தும் வகையொறுத்தல் செய்யுங் கண்ட பரசுசிவன், அருந்தே சுறுசீர்த் தயையேநீ யகலாதெனேச் சூழ்ந் தடர்வினேயால், வருந்தா பத்தி ஞழ்ந்தாற்ரு மையினு வினேயும் வகையனைத்தும், இரிந்தோ டுறநீத் தருணெறிநின் றெளியே னுயுமாண் பருள்வாயே. (அசு)

அஜாய நம.

பிறந்து பிறந்து வினே நுகர்மால் பிரமா திபர்தாய் வயிற் றுறல்போற், பிறந்தி டாதெவ் விதத்தெங்கும் பிறங்கு மச ஞஞ் சிவதயையே, நிறைந்த விடமு முணச்செய்தாய் நிம லன் றனேயெற் சூழ்ந்திடர்செய், நிறைந்த விருளு முணச் செய்வாய் நீடு மொளிபெற் றுயவன்னே. (அஎ)

பாசவிமோசகாயநம.

கட்டுண் டிடுமான் முதலர்மலக் கட்டை யவிழ்க்கும் வலியிலரக், கட்டி லானே யவிழ்ப்பனெனல் காட்டு பாச மோசகப்பேர்ச், சிட்ட விமல சிவதயையே தீய பலசெய் பதகனெனேச், சிட்ட நெறிசேர்ப் பரிதோநின் றிறலுக் கரு ளாய் செகதன்னே. மிருடாயநம (அஅ)

அருளே யேவேண் டன்பர்களின் பாரப் புரிவோ னெனு ம்பொருள்சார், மிருட நாம சிவதயையே விபுத ரெவர்க்குங்

இட்டருமவ், வரனை நீர்பச் சிலைதருவார் வயனு யருள்வான் புரிதிநின, துரிய நோக்க மெளியேனு முறுமா வருள்வா யுலகன்னே. பசுபதயே நம. (அகூ)

பாசப் பிணியார் சுரர்நரர்முற் பற்பல் கோடி பசுக்களு க்கும், பாச மிரித்தாள் பசுபதியாம் பரம சிவமா தயைய ன்னே, ஈசன் பெயரோர் முறைகூறி யிறைஞ்சி நினைப்பா ரிடர்முற்றும், ஈச னிரிப்பா ணியக்குநினை யிறைஞ்சு கின்றே னெளியேனே. தேவாய நம. (கூ0)

தேற்றன் பினர்பா லருளாடல் செய்பே ரொளிய னெனுமியல்பு, சாற்று தேவ நாமசிவ தயையே பவஞ்ச தாபமெலாம், பாற்று பரன்மெய் யன்புடையார் படர்தீர்ந் துயச்செய் பண்பினனின், ஆற்ற லாலன் பில்லெளியே னல க்கண் விலக்கி யருள்வாயே. மகாதேவாயநம. (கூக)

தேவ நாம முகமனுறத் தேவர்க் காங்காங் கியை முத ன்மை, மேவ வருளு மாதேவ விமல சிவனர் தயையேநீ, யாவு முணரு மிறையெளியே னியற்று பிழைநோக் காதரு ள்வான், தாவி லறிவோர் சிறிதின்றித் தளரு மிடர்முன் சாற்றுகவே. அவ்வியயாயநம. (கூஉ)

ஆக்கங் கேடின் பஞர்வினைச்சு ராதி வகைச்சீ வரையியக்கி, ஆக்கங் கேடின் றுரேநிலைய னுமவ் வியய சிவதயையே, நீக்க மின்றி யருள்பரனை நினையே னந்தோ தீயவினை, நீக்க மில்லே னுளத்தையவ னிலவச் சலியா நிலையருளே.

பகநேத்ரபிதேநம.

தக்கன் மகபா தகங்கண்டுந் தவிரா துடன்சார் பாநுவிழி,
நெக்கு விழப்பே தித்தபக நேத்ர பிதுவாஞ் சிவதயையே,
பொக்கமொழித்துச் சிவனடிசேர் புநிதா னந்த முறலுனது,
தக்க வுதவி யாலலதெத் தாத்து மியலா தருள்வாயே.

அவ்வியக்தாயநம.

எங்கு நிறைந்தாங் காங்கிருந்து மியைபக் குவர்க்க லாலெனேயர்க், கங்கு வெளிப்ப டாதமர்ந்தே யருளவ் வியத்த சிவதயையே, துங்க நிறைநின் பெருவெள்ளத் துளியொன் ருன்மால் பிரமாதி, புங்க வரும்வாழ் கின்றனரென் புன்மை தீர்த்தின் பருளன்னே. (கூரு)

தக்ஷாத்வரஹராயநம.

மகங்க ளெவைக்கு முதல்சிவனென் வாய்மை யோர்ந் தும் வல்வினையால், அகங்கொ டக்கன் மகமழித்த தட்சாத் துவர வரசிவனுர், உகந்த தயைநிற் பணிகின்றே னுன்சேயடியேன் மாசொழித்துச், சுகஞ்செய் வதுதாய் கடனன்றோ துயர்தீர்த் தருள்வாய் தூநெறியே. (கூசா)

ஹராயநம.

ஊச லெனவா னிரயமுறு முயிரி னிளைப்பாற் றருட் செயலென், றேசொ லழிப்பாற் றாசிவன தினிய தயையே யென்னுளத்திற், பேசு நாவி லனவரதம் பிறைசேர் முடியோன் றிருக்கோலம், தேசு நிறையுஞ் சிவநாமந் திகழ வருள்வாய் செகதன்னே. (கூஎ)

# சிவதயை வணக்கம்.

பூஷதந்தபிதேநம.

கேடுநோக்கா தவிநகையாற் கிடைத்துண் ணிரவி பற்றகர்த்தோன், பூட தந்த பிதுசிவன்றன் புநித தயைநிற் பணிகின்றேன், பீடு நிறைநின் வயத்தினுய்ப் பிறங்கு பரம சிவன்ருனே, நாடி யடியே னுளத்திலங்கி நடலையொழிப் பான் நவில்வாயே. (கூஅ)

இரவியின்பல்லைத்தகர்த்தவன் என்னும் பொருள்தரும் பூஷதந்தபிதுவாகிய சிவனென்க பூஷன்—சூரியன், பிது—பேதித்தவன்.

அவ்வியக்ராயநம.

தானேயெவர்க்கு மேனிலைய தலைவன் றனக்கு மேற்றலைவர் ஏனே ரொருவ ரில்லாதோ னெனுமெய் தேற்ற விதன்பொருளென், ருனு வறிவர் புகலவ்வி யக்கி ரப்பேர்ச் சிவதயையே, நானேழையரிற்கடையனினைநமந்தின்புறு:மாநல்குதியே

அக்ரம்—தலைமை. வி அக்ரம்—விசேஷத்தலைமை. அ வி அக்ரம்—விசேஷத்தலைமையுள்ள தனக்குமேலாக ஒருதலைமையில்லாத முழுமுதற்றலைமை.

சகஸ்ராக்ஷாயநம.

பல்கோ டியவண் டப்பகுதிப் பரவு மளப்பில் சீவர்செயல், ஒல்கா தொருங்கோ ரளப்பில்விழி யுடைய சகத்திராட்சசிவன், மல்கார் தயைநின் னணுச்சார்பின் வாழ்கின்ருர்மா லயன்முதலோர், அல்கா நினது திருநோக்கா லடியே னுயுமா வருள்வாயே. (௯00)

அளப்பில்விழி—சர்வஞ்ஞதை. அது, எல்லாவற்றையும் ஒருங்கேஅறியும் முற்றறிவுடைமை.

சகஸ்ரபுதேநம.

அளப்பிலடியார்க் கருளவிரைந் தளப்பின்முறையாங் காங்குறுசீர், அளப்பி லருளே யடிகளௌன வவிருஞ் சகத்ர புதசிவன்றன், அளப்பி றயையே சேய்க்கன்னை யலதுண் டோமா சொழியவெனே, அளப்பி லருணீர் முழுக்கிநிறை பமுத மூட்டி யருளன்னே. (௧0௧)

அபவர்க்கப்பிரதாயநம.

ஏனை நலங்க ளௌலாமளித்தே யிதன்மே லொன்றின் றெனும்வாய்மை, ஞான நெறிமோக் கந்தருமோர் நாதனப வர்க் கப்பிரத,மான சிவமா தயையேயென் மனத்தில் நாவிற் சிவவென்னும், மேன மனுநீங் காதென்றும் விளங்குநலனே விழைவருளே. அனந்தாயநம. (௧0௨)

அளவி லாத சீவரியல் பறிந்தாங் காங்கவ் வவர்க்கருள அளவி லுருக்கொண்டடுத்தருளு மனந்த சிவமா தயையேநீ அளவில் பிறப்புற் றினைந்தாற்று தலைந்தே னுடல்நீங் கவதி யெனும், அளவி னலஞ்செய் சிவநாம மகநா வுறுமாண் பரு ளன்னே. எனும்—இடைக்குறை. (௧0௩)

தாரகாயநம.

சீத பிரண வத்துரிமை திகழ்த்து பொருடா னெனவுண ர்த்து,நாத நிறைதா ரகசிவத யாவே நாயேன் நடலையொரீஇ ஏதமறமுக் காணத்தொண் டென்றும் புரிந்தீற் றினில்வேறு போத முருது சிவவிளக்கப் பொலிவே யருள்வாய்பூரணியே

# சிவதயை வணக்கம்.

திரிசுபர்ணப்பிரியாயநம.

திரிசு பன்ன மெனமறையுந் திகழ்த்திச் சாஞா னங்கிரியை, உருவ வில்வத் தார்வநனி யுண்மை யுணர்த்து திரிசுபன்னப், பிரிய சிவமா தயையேநீ பிறவிக் கடலாழ்ந் துலேவாதை, இரியு நிலேயே நினேவணங்கு மெளியேற் கருள்வா னிரங் குதியே. அத்துவிதானந்ததாயிநே நம. (௧௦௫)

விசிட்ட கேவ லாதியுப பதம்வேண் டாது தனிமிளிர்சீர், மிசைக்கொண் மாண்பிற் சுத்தநிலே விரவத் துவிதா னந்த மென, இசைக்கு மோக்க தாயிசிவ னினிய தயையா மெம தன்னே, அசைக்க வரிய மெய்யன்பே யடியேன் பெறுமா வருள்வாயே. (௧௦௬)

விசிஷ்டாத்துவிதிகளாகிய வைஷ்ணவரும் கேவலாத்துவிதி களாகிய மாயாவாதிகளும், மேற்கொண்ட அத்துவிதம் விசிஷ்டம் கேவலம் என்னும் (உபபதம்) அடைமொழிகள்பெற்றே வழங்குகின் றன. சைவசித்தாந்திகள் மேற்கொண்டுள்ள அத்துவிதம் என்னும் சொல் அவ்வடைமொழி ஒன்றும்வேண்டாது தனித்துநின்றே விள ங்குகின்றது. இதனல் சுத்தாத்துவிதமென்பதாம். சுத்தம் என்னும் சொல் தன்னிடத்துவேறென்றும் கலவாத தனி என்னும் பொருள தாம். இச்சுத்தாத்துவிதமே வேதவேதாந்தங்களாற் கூறப்படுகின் றது. இதனே, யசுர்வேதமண்டல ப்ராஹ்மணோபநிடதம் "தந் மநோ விலயம் யாதி தத் விஷ்ணோ: பரமம்பதம் தல்லயாத் சுத்தாத் வைதஸித்தி: பேதாபாவாத் ஏததேவ பரமதத்வம்" இதன்பொருள்

# சிவதயை வணக்கம். 

அதனிடத்தில் (சிவத்தினிடத்தில்) மனம் விலயத்தையடைகிறது. விலயம்—விசேஷஒடுக்கம். அது விஷ்ணுபதத்தைக்காட்டிலும் மேலானபதமாம் அதில் ஒடுங்குதலால் (அது) சுத்தாத்வைத சித்தியாம்(இருளொளிபோற்) பேதமின்மையால் இதுவே மேலான உண்மைப் பொருள்ாம்; என்னுமுண்மையாற்காண்க. ஆனந்ததாயீ—ஆனந்தத்தைக்கொடுப்பவன். ஆத்மதத்வாதிபதயேநம.

பூதமைந்து பொறியைந்து புலன்களைந்து வாக்பாதம், ஆதி
யைந்து நாற்கரண மாய வான்ம தத்துவங்கள், போத விய
க்கு முழுமுதன்மைப் புநித சிவமா தயையன்னே, ஏதநெறி
சாய்த் தருணெறியே யிலக்கும் விறன்மிக் கருள்வாயே.

இவ்விருபத்துநான்கும் ஆத்மதத்வம் எனப்படும். இவை மாயாவாதிகளும் வைஷ்ணவர்களும் மேற்கொண்டனவே.

வித்யாதத்வாதிபதயேநம.

கால நியதி கலைராகம் வித்தை யிவைகஞ் சுகமாக்கொள்
மேல புருடன் மாயையெனும் வித்தியாதத் துவமேழும்
ஏல வியக்கு முழுமுதன்மை யீச தயையே யெளியேற்கு
நீலகளத்த னுளத்தென்று நிலவுநிலைதந் தருள்வாயே. (௧௦அ)

காலம் நியதி கலை ராகம் வித்தை புருடன் மாயை இவ்வேழும் வித்தியா தத்துவங்களெனப்படும். இதனை சுவேதாசுவதா வேதாந்தம் விளக்குகின்றது. "காலஸ்வபாவோ நியதிர் யதிரிச்சா பூதாநி யோநி புருஷ இதிசிந்த்யம்" என்னுமந்திரத்தாற்காண்க.

## ௩௬ சிவதயை வணக்கம்.

சிவதத்வாதிபதயேநம,

சுத்த வித்தை மகேசநடுத் துலங்குசாதாக் கியமதன்மேற் சத்தி சிவமைந் தாயசிவ தத்துவாதி பதிசிவனே, நத்தன் பரு க்கா ரருள்புரிவா னவிற்று தயையே நயந்தருள்வாய், மெய்த்தண் சைவ நெறிமகிமை விளக்கி நிறுவு மிகுவிறலே.

சுத்தவித்தை மகேசம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் இவ் வைந்தும் சிவதத்துவம்எனப்படும். இதனைப், பிருகத்சாபாலவேதாந் தம், "சிவஞ்சக்திஞ்ச சாதாக்யமீசம் வித்யாக்யமேவச, என்னும் மந் திரத்தால் விளக்குகின்றது.

சட்த்ரிம்ஸத்தத்வாசநாயநம.

வகைமூன் றுய்முப் பானுருய் மலர்தத் துவங்க ளெல் லாங்கீழ்த், தொகையா தனமா யமைதரமேற் றுலங்கு பரம சிவதயையே, அகமே பிரம மென்றிறுமாந் தறிவி லாரை மருட்டுறுவஞ், சகர்தீ தொழித்தெங் கணுஞ்சைவந் தழை யப் புரிதொண் டருளன்னே. (௧௧௦)

இம்முப்பத்தாறுமே, வேதவேதாந்தாதி மெய்ந்நூல்களாற் கூறப்படும் தத்துவ வரிசைகளாம். இவை, தனக்கு ஆசனமாயடங்கி நிற்க இவற்றைக்கடந்து நிற்போன் பரமசிவனொருவனே. சிவனரு ளால்இத்தத்துவங்களைக்கடந்து சென்றுதிருவடிப்பேறு பெறுவோர் சித்தாந்த சைவர்களே. இதனுலிவர்கள்(௩௬) படியுங்கடந்தவராவர். மாயாவாதிகள், ஆத்மதத்துவம் (உச-ம்) அதன்மேற்பிரகிருதிமாயை யும் நாமல்லேமெனக்கழித்துப் புருடனையே பிரமமெனப்பற்றி நாம்

பிரமமென்பவர்களே. அதனுல் அவர்கள் (௨௫) படிமட்டும் கடந்து அம்மட்டிலேயே களிப்புற்று நிற்பவர்களே. இதனே, "ஆகின்ற தொண்ணூற்றொ டாறும் பொதுவென்ப, ஆகின்ற வாறு ற்ருஞ்சைவர் தத்துவம், ஆகின்ற நாலேழ்வே தாந்திமா யாவாதிக், காகின்ற வை யைந் தறுநான்கு வைணவர்க்கே." என்னுந்திருமந்திரத்தாற்காண்க. சிலமாயாவாதிகள் இவ்வுண்மையும் நோக்காது மேற்கூறிய (௨௫) தத்துவங்களில் ஒன்றையாவது கடக்குமாற்றலின்றி நாங்களே பிர மமென்று வாய்மதம்பேசி எங்களுக்கும் (௩௬) தத்துவமுண்டு, அவை முற்கூறிய (௨௪ம்) வாயுக்கள் பத்தும் அவிச்சையும் சீவனு மென்கின் றனர். ௧௪வாயுக்கள் பஞ்சபூதங்களிலொன்ருகிய வாயு பூதத்திலடங கும். அவிச்சை பிரகிருதியிலடங்கும். சீவன் இவற்றைக்கடந்து மேற் செல்வோன். ஆதலால் அவைகள் அம்மாயாவாதிகள், சைவர் (௩௬) கூறுகின்ருர்களே என்று தாமாகக் கற்பித்துக்கொண்டனவேயாம் ஆகவே மேற்கூறிய (௨௪) (௭) (௫) ஆகிய மூவகை முப்பத்தாறு தத்துவங்களே சுருதி சம்மதமென்பது காண்க.

சாம்பபரமேச்வராயநம.

ஓம்பு பலர்க்கு மாட்சிதரீஇ யொருங்காள் சத்தி யுட னிலவுஞ்,சாம்ப பரமே சுவரசிவ தயையே நினைப்போற் றிது நவின்ஞேர், ஆம்பன் னலங்க ளெலாம்வாய்ப்ப வாயு ணீட வாழ்ந்தீற்றில்,தேம்பொன் மலர்ச்சே வடிநிழல்சேர் திறனே யருள்வாய் செகதன்னே.

சிவதயை வணக்கம்
முற்றிற்று.

## சிவநாம வணக்கம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௧௯ | களிஞு | களினு |
| ௪ | ௫ | பிறறி | பிறரி |
| ஷை | ௯ | நோக்கி | நோக்கி |
| ௬ | ௧௧ | உண்வச | உன்வச |
| ௧௨ | ௨ | வேண்ணீ | வெண்ணீ |

## சிவதயை வணக்கம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௪௦ | செய்கேநீ | செய்கேனீ |
| ௧௪ | ௨௦ | செல்லர | செல்லா |
| ௨௬ | ௮ | பஙை | பகை |
| ௨௭ | ௰ | பரல் | பால் |
| ௨௮ | ௪௦ | ரெவக்கும் | ரெவர்க்கும் |
| ஷை | ௧௯ | சாஸ்வ | சாச்வ |

பிரமோதூதவருஷ ஆவணிமீ 1௳

